# செந்தமிழ்ச் செல்வி




## உள்ளுறை



சிலம்பு-௫௭] வள்ளுவர் ஆண்டு-௨0௧௪, மாசி Mar. '83 [பரல்-௭

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---



---


"செந்தமிழ்ச் செல்வி"

ஆண்டுக் கையொப்பம் :

உள்நாடு ரூ. 16 00 வெளிநாடு ரூ. 30 00

வாழ்நாள் கையொப்பம் :

உள்நாடு ரூ. 150 00 வெளிநாடு ரூ. 300 00

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு உ௦கச, மாசி | பரல் |
| --- | --- | --- |
| ருள | மார்ச்சு 1983 | எ |


## திருக்குறள் பணி

உலகப் பொது மறையாம் திருக்குறளை ஒல்லும் வகையா னெல்லாம் பரப்ப வேண்டுமென்ற நோக்கத்துடன் அரை நூற்றுண்டுக் காலம் அரும்பணியாற்றியவர் மறைந்த கழக ஆட்சியாளர் தாமரைத்திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கள். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் வழி திருக்குறளைப் பல்வேறு அளவுகளில் பல்வேறு வகையில் வெளியிட்டு மகிழ்ந்தவர்கள். கைக்கு அடக்கமான 'தீப்பெட்டி அளவு திருக்குறள்' முதல் தமிழ் நூல் விற்பனையில் பெருஞ்சாதனை செய்துள்ள 'திருக்குறள் தெளிவுரை' வரை திருக்குறளில் பல்வேறுவகைப் பதிப்புகளை வெளியிட்டுள்ளார்கள். அவாகள் கழகத்தின் வழி பல்வேறு பணிகளாற்றியிருப்பினும், பல்வேறு நிலையங்களை நடத்தியிருப்பினும் இறையடி கலப்பதற்குமுன் தம்முடைய நாட்குறிப்பில் இறுதியாக 1—1—83 அன்று எழுதியுள்ள தொடர் அவர்கள் தம் உள்மனத்தில் எதைத் தலையான பணியாகக் கருதியிருந்தார்கள் என்பதை எடுத்துக் காட்டுகின்றது.

வ. சு. ஐயா அவர்கள் தனித் தமிழியக்கத்தந்தை மறைத்திரு. மறைமலையடிகளாரை எல்லாவழிகளிலும் பின்பற்றியவர். அடிகளார் தம் வாழுளில் கடைசி ஐம்பது ஆண்டுகள் நாள்தோறும் நாடகுறிப்பு எழுதி வைக்கும் கடமையை மேற்கொண்டிருந்தார்கள். அடிகளார் வழியில் ஐயாவும் ஏறத்தாழ நாற்பதாண்டுகள் நாட்குறிப்பு எழுதி அவற்றைப் பேணிக் காத்து வைத்துள்ளார்கள். அவர்தம் வாழுளில் இறுதி ஒரு திங்கள் ஓரளவு நோய் மிகுதியால் தம்மால் தொடர்ந்து எழுத முடியா

விடினும் முடிந்தபோது நாட்குறிப்பு எழுதியுள்ளார்கள். 1-1-83 அன்று நாட்குறிப்பு எழுதியபின் 24-1-83இல் தாம் மறையும் வரை அவர்கள் நாட்குறிப்பு எழுதவில்லை. இவ்வாண்டு பிறந்தவுடன் அவர்கள் எழுதியுள்ள தொடர் 'திருக்குறள் பணியே-கழகத்தின் பணியேஎன் பணி' என்பதாகும்.

இத் தொடருக்குக் 'கழக இலக்கியச் செம்மல்' புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் நெல்லையில் 16-2-83இல் நடைபெற்ற வ. சு. நினைவுக் கூட்டத்தின்போது நல்ல விளக்கம் கொடுத்தார்கள். 'திருக்குறள் பணியே கழகத்தின் பணி' 'திருக்குறள் பணியே என் பணி' 'என் பணி கழகத்தின் பணியே' 'என் பணி திருக்குறள் பணியே' என்று இவ்வாறு பல்வகையாகக் கொண்டு கூட்டி ஐயா அவர்களின் தலையான பணி கழகப் பணி என்றும் அப் பணியினுள்ளும் தலையான பணி 'திருக்குறள் பணி' என்றும் நிறுவினர்கள்.

தம்முடையவாணுளில் அவர் பல்வேறு பணிகளாற்றியிருக்க, 'திருக்குறள் பணியே என் பணி' என்று ஏன் குறிப்பிடவேண்டும், காரணம் திருக்குறளைப் பரப்ப வேண்டுமென்ற எண்ணம் அவர்கட்கு அவர்தம் பள்ளிநாட்களிலேயே ஏற்பட்டுவிட்டது. அவர்தம் வழக்கறிஞ நண்பர் ஒருவர் கைக்குள் அடங்குவது போன்ற ஷேக்ஸ்பியர் நாடக நூலொன்றைக் காட்டியபோது இதைப்போல் திருக்குறள் வெளிவந்தால் எவ்வளவு சிறப்பாக இருக்குமென்று ஐயா அவர்கள் எண்ணினர்கள். இறையருள் கூட்டுவித்ததன் பயனுகத் தமிழ் நூல் பதிப்புத்துறையே அவர்தம் வாணுள் பணி யாயிற்று. தமக்குக் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு அவர்கள் திருக்குறளுக்கு ஆற்றிய தொண்டினை அவர்களே 'செந்தமிழ்ச் செல்வி'யில் தொடராக எழுதிய 'திருக்குறள் பணியே கழகத்தின் தனிப்பெரும்பணி' என்ற கட்டுரைகளில் பரக்கக் காணலாம்.

அவர் கழகவழி திருக்குறளை வெளியிட்டதுடன் நில்லாது, பிற மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்க்கப்பெறப் பெருந்துணையாக இருந்தார். தெலுங்கு, சிங்களம், பர்மீயம், பிஜி, சப்பான் போன்ற மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்ப்புகள் வெளிவரக் காரணராயிருந்தவர் அவரே. சப்பான் மொழியில் மொழிபெயர்க்கப்பெற்ற திருக்குறள் சப்பான் நாட்டில் க்யோடோ பெண்கள் பல்கலைக் கழகத்தில் பாடமாக வைக்கப்பெற்றுள்ள செய்தியை அம் மொழிபெயர்ப்பினைச் செய்த சப்பானிய அறிஞர் திரு. சுசோ மட்சுநாகா அவர்கள் ஐயா அவர்கட்கு அவர்கள் நோயுற்றிருந்த இறுதி நாளில் எழுதியிருந்தார்கள். அதனை

அறிந்து ஐயா பெரிதும் மகிழ்ச்சியுற்ருர்கள். இதைப்போல் உலகிலுள்ள பல்வேறு பல்கலைக் கழகங்களில் அவ்வந் நாட்டு மொழிகளில் திருக்குறள் பயிற்றுவிக்கப்பட வேண்டுமென்பது அவர்கள் அவா.

திருக்குறள் உலகப் பொதுநூல் என்று நம்மளவில் நாம் எழுதுவதைவிட உலகளவில் அது பொது நூலாக ஏற்றுக்கொள்ளப்பெற்று நன்கு எல்லோராலும் பயிலப்பெற வேண்டுமென்பதும் திருக்குறள் நெறி உலக முழுவதும் பரவ வேண்டுமென்பதுமே அவர்கள் அவா. அதனைத் தமிழ்மக்கள் அனைவரும் ஒன்று கூடி நிறைவேற்றுவதே அவர்கட்குச் செய்யும் நன்றிக் கடனாகும்.

———

## திருக்குறட் சிறப்பு

எத்தனை நூல் கற்ருலும் எப்பொருளை ஆய்ந்தாலும்
அத்தனைக்கும் ஆன்ற பெருமைதரும்—மெய்த்தமிழ்
வள்ளுவர் மாநிலத்து மக்களெல்லாம் மாறின்றிக்
கொள்ளவுளம் தந்த குறள்.

மாறுகின்ற வையகத்தின் மாருத பண்பனைத்தும்
தேறி யுரைக்கும் திருக்குறட்கு—நேரொருநூல்
எக்காலத் தெந்நாட்டில் யாரும் உரைத்ததில்லை
முக்காலும் சொல்வேன் முடிவு.

ஆரியத்தில் ஆங்கிலத்தில் ஆன்றபிற செம்மொழியில்
சீரியநூற் கெல்லாம் சிரோமணியாம்—பேரியலும்
இன்றமிழ் வள்ளுவனர் ஈந்த திருக்குறளே
என்பர் அறிஞரெலாம் இன்று.

நீரில் நிலத்தில் நெடுவிசும்பில் நீள்வெளியில்
ஆரும் புகாத அணுவுக்குள்—கூர்த்த
அறிவு செலுத்தும் அறிஞருளும் உண்டோ
செறிவுடையார் வள்ளுவர்போல் செப்பு.

தாயைத் தலைவணக்கித் தம்மையும் மேம்படுத்தும்
பேயர் செயல்பெரிதும் பேதைமைத்தே—மாயாச்சீர்
வள்ளுவனர் தந்த குறளிருக்க மாண்புதரும்
தெள்ளுதமி ழிருக்கச் சென்று.

செல்வம் உயர்பதவி செய்தொழில் வாணிகம்
எல்லாம் பிறமொழியால் எய்துமாப்—பொல்லா
நெறியால் தமிழின் நிலையழித்தபோதும்
அறிக்குறள் வென்றி யது.

—உரைவேந்தர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை.

# கழக ஆட்சியர் வ. சு. அவர்களின் நினைவுக் கூட்டம்

மறைந்த தமிழ்ப் பெரியாரும், கழகத்தின் ஆட்சியருமான தாமரைச் செல்வர். வ. சுப்பையா பிள்ளை அவர்களின் நினைவுக் கூட்டம் 12-2-83 அன்று சென்னை கோகலே மண்டபத்தில் மாலை 6 மணி அளவில் தேவார இசைவாணர் சைதை நடராசன் அவர்களின் தேவாரப் பாடல் இன்னிசையுடன் தொடங்கிற்று.

சேலம் இசையரசி செயலட்சுமி அம்மையார் இறைவணக்கப் பாடல்கள் பாடியபின், இந்நாள் கழக ஆட்சியர் திரு. இரா. முத்துக் குமாரசாமி. எம். ஏ., பி. லிப். அவர்கள் தமது முன்னுரையில்,

''அண்மையில் மறைவுற்ற தமிழ்ப் பேரறிஞரும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளருமான தாமரைத்திரு செந்தமிழ்ச் செல்வர் பேரவைச் செம்மல் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களின் நினைவுக் கூட்டம் இப்பொழுது தொடங்க இருக்கிறது. இக் கூட்டத்திற்கு நம்முடைய மாண்புமிகு செய்தி அறநிலையத்துறை அமைச்சர் இராம. வீரப்பன் அவர்கள் தலைமை தாங்குகிறார்கள். முதற்கண் என்னுடைய பெருமதிப்பிற்குரிய செட்டிநாட்டரசர் இராஜா சர் முத்தையா செட்டியாரவர்கள் ஆட்சியாளர் அவர்களுடைய திருவுருவப் படத்தைத் திறந்து வைத்து இந்நிகழ்ச்சியைத் தொடங்கி வைப்பார்கள்'' என்று கூறினர்.

செட்டிநாட்டரசர் இராஜா சர் முத்தையா செட்டியாரவர்கள் ஆட்சியாளரின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்து, தமிழ்மொழிக்கும் நாட்டுக்கும் சைவத்துக்கும் அவர்கள் செய்த தொண்டுகளைப் பற்றியும் மறைமலையடிகள் நூலகத்தை நடத்தி வந்த மாண்பினையும் தமக்கும் திரு. பிள்ளை அவர்கட்கும் இருந்துவந்த நீண்ட தொடர்புகள் பற்றியும் உரையாற்றினர்.

அடுத்து உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் டாக்டர் சா. வே. சுப்பிரமணியம் அவர்கள் பேசுகையில், ''பாரதியார் தோன்றிய நெல்லைப் பூமியில் திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் தோன்றினார்கள். மற்றும் செக்கிழுத்த செம்மல் வ. உ. சி., தமிழ்த் தென்றல் சிவஞான முனிவர், பேராசிரியர் ரா. பி. சேதுப் பிள்ளை ஆகியோர் தோன்றிய அதே நெல்லைப் பூமியில் சுப்பையா பிள்ளையவர்கள் தோன்றினர்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு

நிலையில் பெருஞ் செயல்கள் புரிந்தவர்கள். திரு. சுப்பையா பிள்ளையவர்கள் டாக்டர் போப் அவர்கள் கையால் எழுதிவைத் திருந்த திருக்குறள் நாலடியார் போன்ற நூல்களை மறைமலை யடிகள் நூலகத்தில் சேமித்து வவத்திருக்கிறார்கள். புற்றீசல்கள் போல் வருகின்ற புதினங்களை அவர்கள் பதிப்பதில்லை. தமிழே தம் பேச்சும் மூச்சுமாக வாழ்ந்தார். அவரைக் கண்ட மேல்நாட் டறிஞர் ஒருவர், "உருவு கண்டு எள்ளாமை வேண்டும். இந்தச் சிறிய வடிவமா இத்தகைய ஆற்றல் படைத்திருக்கிறது" என்று வியந்து கூறினர். அவர் வாழ்ந்த காலம் தமிழுக்கே தொண்டு செய்த காலமாக அமைந்தது. எனவே அவர்கள் செய்த தொண்டைப் பேராசிரியர்களாகிய நாங்கள் தொடர்ந்து செய்யக் காத்துக்கொண்டிருக்கிறோம் என்று கூறி உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றத்தின் சார்பில் அவரைப் பாராட்டி வணங்கு கிறேன்" என்று கூறினர்கள்.

மொழி பெயர்ப்புக்துறை இயக்குநர் டாக்டர் ஒளவை நடராசன் அவர்கள் பேசுகையில்,

"திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் முதன்முதல் இந்தி எதிர்ப்புப் போராட்டத்திற்காகக் கூட்டம் நடத்திய இடம் இதே இடம்தான். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகக் கூட்டங்களை வரலாற்றுத் தொடர்போடு கூட்டி மகிழ்ந்திருந்த அந்தப் பெருந்தகை அவர்களுடைய இரங்கல் கூட்டம் இங்கே நிகழ் கிறது என்பதை எண்ணும்போது நம்முடைய நெஞ்சம் பெரிதும் நெகிழ்கிறது.

தமிழகத்தின் பல்கலைக் கழகத்தின் இரு வேந்தர்கள் இங்கே அமர்ந்திருக்கிறார்கள். இந்த நல்ல வேளையில் சை. சி. நூற்பதிப்புக் கழக வேந்தர் இல்லையே என்பதை எண்ணு கிறபோது, மூவேந்தர்களிலே ஒரு வேந்தர் போன பிறகு இரு வேந்தர்கள் வந்திருப்பது நம்முடைய இரக்கத்தை யெல்லாம் தெருட்டுகிறது.

எந்த நாட்டு வரலாற்றிலும் ஒரு பதிப்பாளருக்குப் பத்மஸ்ரீ பட்டம் வழங்கப்பட்டதாகத் தெரியவில்லை. சுப்பையா பிள்ளையவர் களுக்கு முன்பும் இல்லை. இந்த நாள்வரையிலும் இல்லை. அதே போல புரட்சித் தலைவர் அவர்கள் ஆட்சிக்கு வந்த பிறகு செந்தமிழ்ச் செல்வர் என்ற விருதை எந்தப் பதிப்பாளராவது பெற்றிருக்கிறாரா என்றால் அது நம்முடைய வ. சு பிள்ளை அவர்கள்தாம்.

பதிப்பாளர்கள் நூலாசிரியர்களிடம் நூல்களை வாங்கிப் பதிப்பிப்பார்கள், ஆனல் சுப்பையா பிள்ளை அவர்களோ நூலின்

தரத்தை அறிந்து—நூலாசிரியரின் தரத்தை அறிந்து—உரை எழுதத் தக்கார் இன்னார் எனத் தேடித் தேடிச் சென்று அவர்களைக் கொண்டு நூல்களை எழுதச் செய்ததுடன் புலவர்களை நாட்டுக்கு அறிமுகமும் செய்தவர்களுமாவார்கள்.

“மலிவான விலையில் பல்லாயிரக் கணக்கான நூல்களை இலாப நோக்கத்தோடு வெளியிடுவதைக் காட்டிலும் செந்தமிழ் நூல்களைத் தேடித் தேடி வெளியிடுவதுதான் என்னுடைய நோக்கம்” என்ற கடைப்பிடிப்போடு வாழ்ந்துவந்த பதிப்பாளரை இனித் தமிழகம் எங்கே காணப் போகிறது என்பதைத் தான் நாம் எண்ணி வருந்த வேண்டியிருக்கிறது. பேராசிரியர்களே சில பிற மொழிச் சொற்களைக் கலந்து எழுதுவார்களானால் அவற்றைக் களைந்துவிடவேண்டும் என்று அவர்களுக்குக் கடிதம் எழுதும் உரம் திரு. வ. சு. பிள்ளை அவர்களுக்குத்தான் உண்டு.

நெல்லையில் இருந்து சில பிள்ளைகள் வந்தார்கள், சென்னை நகர்க்கு, ஆனால் தமிழைச் செழிக்க வைத்த பிள்ளை வ. சு. பிள்ளை என்று அன்னாளில் சேதுப் பிள்ளை கூறினார்கள். திரு. பிள்ளை அவர்கள் ஒரு புலவராகவும் புரவலராகவும் வாழ்ந்தார். மறைமலையடிகளாரைத் தமக்கு வழிகாட்டியாகக் கொண்டார். திரு. வ சு. பிள்ளை அவர்கள் மறைந்தாலும் அவர் வகுத்த கொள்கைகள், அவர் வகுத்த நோக்கங்கள் அவர் பதிப்பித்த முறை இவற்றையெல்லாம் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் கடைப்பிடித்துத் தலைசிறந்த—நிலை சிறந்த நிலையமாகத் திகழ வேண்டும் என்று சொல்லி அவர்தம் மருகர் திரு, முத்துக் குமாரசாமியவர்கள் திரு. பிள்ளை அவர்களின் பணிகளைத் தம் தோளிலிலே சுமக்க வேண்டும். அது பெரும்பணி; அரும்பணி; அதனை அஞ்சாது எடுத்துச் செல்ல வேண்டும்” என்று குறிப்பிட்டார்.

**மாநிலக் கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் மெ. சுந்தரம் அவர்கள் :**

1938 ஆம் ஆண்டில் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் சார்பில் தமிழ்ப் பாதுகாப்புக் கழகம் ஏற்படுத்தித் தமிழை வளர்த்தது ஒன்று. ‘செந்தமிழ்ச் செல்வி’யில் பாவாணர் கட்டுரைகளை வெளியிட்டது இரண்டு; மூன்றாவதாக மறைமலையடிகளார் நூல்நிலையத்தை ஆராய்ச்சியாளர்க்குப் பயன்படச் செய்து அதனை ஆராய்ச்சிப் பெட்டகமாகச் செய்தது. இவை திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் அரிய பணிகளாகும். திரு. பிள்ளை அவர்கள் பணத்திற்காகத் தொண்டு செய்யவில்லை. திருக்குறளைப்

பரவச் செய்தது அவர் தம் சீரிய பணியாகும். எனக்கொரு வருத்தம்; அஃதாவது திரு பிள்ளை அவர்களின் இத்தகைய சீரிய பணிகளுக்காக அவருக்கு டாக்டர் பட்டம் அளித்திருத்தல் வேண்டும். அது கிடைக்காதது வருந்தத் தக்கது. பாவாணர் நூல்களைத் திரு. பிள்ளை அவர்கள் வெளியிட்டார்கள். தமிழுக்குப் பாவாணர் நூல்கள் அடிப்படை. அத்தகைய நூல்களை அரசு ஏற்று வெளியிட வேண்டும். அதுதான் சுப்பையா பிள்ளை அவர்களுக்குச் செலுத்தும் நன்றி.

தமிழ் வளர்ச்சிக் கழக இயக்குநர், டாக்டர் மா. நன்னன் அவர்கள் பேசுகையில்,

"திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் பணிகள் இறுதி வரையிலும், எல்லாராலும் பின்பற்ற இயலாதவை. தனித் தமிழ்க் கொள்கை, தமிழ்ப் பாதுகாப்புக் கொள்கை, மறைமலையடிகள் பெயரால் நடக்கும் மாபெரும் நூலகப் பணிகள், செந்தமிழ்ச் செல்வி ஏடு நடத்தும் பணி, கிடைத்தற்கரிய நூல்களைத் தாமே தனித்து வெளியிடும் பணி ஆகியன வேறு எவராலும் பின்பற்றக்கூடியன அல்ல. அப்படிப்பட்ட ஆற்றல் படைத்தவர் வேறு எவரும் நாட்டிலே இல்லை. அது ஒன்றே அவரது பெருமையை எடுத்துக் காட்டுகிறது. உண்மையைச் சொல்ல வேண்டுமானால் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் என்று ஒன்று இல்லாதிருக்குமானல் அரசே இத்தகைய பணிகளை மேற்கொண்டு தமிழ் இலக்கிய நூல்களை வெளியிட வேண்டும் என்ற ஒரு கிளர்ச்சியே தமிழ்நாட்டில் கட்டாயம் தோன்றியிருக்க வேண்டும். ஏனெனில் வேறு யாரும் அப்பணியினைத் தொட்டிருக்க மாட்டார்கள்.

"ஓர் அரசு செய்ய வேண்டிய மாபெரும் பணியை அவர்கள் செய்து வந்திருக்கிறார்கள். அதற்காக அவர்களை நான் பாராட்டுகிறேன். தனித் தமிழ்க் கொள்கையில் அவர்கள் விடாப்பிடியாக இருந்தார்கள். அதை மக்களுக்குக் கூறினார்கள். எனவே தமிழ் வளர்ச்சித் துறையின் சார்பிலே என்னுடைய மரியாதையைத் தெரிவித்துக் கொள்கிறேன்" என்றார்.

கல்லூரிக் கல்வி இயக்குநர் டாக்டர் கா. மீனாட்சி சுந்தரம் அவர்கள்:

"திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் செந்தமிழ்ச் செல்வராக விளங்கினாலும், அந்தப் பண்பாட்டையே அடிப்படையாகக் கொண்டு தமது ஒழுக்கத்தில் கடைசி வரையில் கடைப்பிடியாக இருந்து, ஆங்கிலத்திலும் தமிழிலும் பல நல்ல பதிப்புகளைக் கொண்டுவந்த பெருமையினால் அறிவுச் செல்வத்தைத் திரட்டுவதும், தொகுப்பதுமாக அவர் அமைந்து சென்றதனால் நாம்

என்றும் அவரை நினைக்கின்றோம். அவர் திட்டம் தீட்டுவதோடு புலவர்களை யெல்லாம் வளர்க்கின்ற பெருமகனாக விளங்கினார்; அவரது எண்ணத்தை நாம் எல்லோரும் கூடிக் கடைப்பிடிக்க வேண்டும்; கழக உறுப்பினர்கள் அவரது பணிகளை நிறைவேற்ற வேண்டும், அதற்கு அவர்களின் அருள் வீச்சு துணை புரிய வேண்டும்.''

**சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியம் அவர்கள் :**

''திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் தம் வாழ்நாளில் நல்ல தமிழ் நூல்களைத் தவிர நாவல்களை வெளியிடுவதில்லை என்பதில் உறுதியோடிருந்து தனித் தமிழ் நூல்களையே வெளியிட்டவர் என்பது குறிப்பிடத் தக்கது. வெளியுலகிற்குத் தெரியாதிருந்த அறிஞர்களைத் தேடி-ஊக்கமளித்து-பணமும் தந்து அவர்களை யெல்லாம் உயர்த்திக் காட்டியவர் சுப்பையா பிள்ளை. எங்கோ சிற்றூரில் வாழ்ந்த மு. வ. அவர்களைச் சென்னைக்கு வரவழைத்து வேண்டும் வசதிகள் செய்து தந்து திருக்குறள் தெளிவுரையை அவர் வாயிலாக எழுத வைத்தது சீரிய செயலாகும்; இன்றைக்குப் பத்து லட்சம் படிகளுக்கு மேல் அந்நூல் விற்பனையாகி யிருக்கிறது—தமிழர் அனைவர் கையிலும் அது தவழ்கிறது என்று சொன்னால், அந்தத் திருத்தொண்டு திரு. சுப்பையா பிள்ளை அவர்களால் முடிந்தது என்பதை நாம் நினைவு கூர்தல் வேண்டும்.

''மாநாடுகள் கூட்டி நல்ல கட்டுரைகளை நூலாக வெளியிட்டு, அவை ஆய்வுலகிற்குத் துணை நிற்கச் செய்தவர் திரு. பிள்ளையவர்கள். தமிழ்நாட்டில் இருபது ஆண்டுகளுக்கு முன்னால் ஏழே பேர் டாக்டர்களாக இருந்த நிலை மாறி இன்றைய தினம் 200 டாக்டர்கள் இருக்கிறார்கள் என்றால், அவர்களுள் ஐம்பது விழுக்காடு மறைமலையடிகள் நூலகத்திலே இன்று கிடைக்கின்ற நூல்களுக்குப் பங்கு உள்டு.

''நூல் வெளியீட்டுத் துறையில் ஓர் ஒழுங்கை—அமைப்பை உருவாக்கி, அதைக் கடைசி வரையில் பாதுகாத்தவர் என்ற காரணத்தாலும், மறைமலையடிகளாருக்குப் பின் தனித் தமிழ்த் துறையைப் பாதுகாத்து நல்ல நூல்களைப் பதிப்பித்த காரணத்தாலும் நாம் அவரைப் பாராட்ட வேண்டும்.''

**ஈரோடு வாசவி கல்லூரிப் பேராசிரியர் பன்மொழிப் புலவர் திரு. மு. சதாசிவம் அவர்கள் :**

''இதுவரை 150 நூல்களைத் தொகுத்து அவற்றுள் 32 நூல்களை வெளியிட்டிருக்கிறேன் என்றால், அதற்கு நான் சைவ

சென்னையில்

# கழக ஆட்சியர் வ. சு. அவர்களின் நினைவுக் கூட்டம் (12–2–83)



கழக ஆட்சியர், தாமரைச்செல்வர் வ.சு. அவர்களின் திருவுருவப் படத்தைச் செட்டி நாட்டரசர் இராசா சர் முத்தையா செட்டியார் அவர்கள் திறந்து வைக்கிறார்.



அமைச்சர் மாண்புமிகு கே. ஏ. கிருஷ்ணசாமி அவர்கள் இரங்கலுரை ஆற்றுகிறார்.



இராமச்சந்திர தீட்சிதர் எழுதிய Studies in Tamil Literature and History என்னும் நூலை மாண்புமிகு அமைச்சர் இராம வீரப்பன் அவர்கள் வெளியிட டாக்டர் ம. பொ. சி அவர்கள் பெற்றுக் கொள்கிறார்.

நெல்லை, மதுரை

# நினைவுக் கூட்டங்கள்

(16,18 - 2-83)



நெல்லையில் நகர் மன்றத்
தனி அலுவலர்
உயர்திரு
உ. சிவதாணு பிள்ளை
அவர்கள் வ. சு. அவர்
களின் படத்தைத்
திறந்து வைத்தல்.



மதுரையில்
...ழ்மறைக் காவலர்
...ி. பழநியப்பனார்
அவர்கள்
... . சு. அவர்களின்
படத்தைத்
...றந்து வைத்தல்.



மதுரைமாவட்ட நீதிபதி
உயர்திரு
தெ.பெ.சு. பழநியப்பன்
அவர்கள் தலைமை
உரை ஆற்றுதல்
கழக ஆட்சியர் உடன்
இருத்தல்

சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில் பெற்ற பயிற்சியும், ஐயா அவர்கள் எனக்குத் தந்த ஊக்கமுமே காரணங்களாகும். கடந்த இருபது ஆண்டுகளாகக் கழகத்தில் அவ்வப்போது நான் செய்து வந்த தொண்டிற்கு நன்றி தெரிவிக்க வேண்டும் என்ற கருத்தி ஞலோ என்னவோ, எனக்கே தெரியாமல், ''சொல்லாய்வுக் கலைச் செல்வர்'' என்னும் பட்டத்தைக் கழக மணி விழாவில் எனக்கு அளித்துச் சிறப்பித்தார்கள் என்ருல் அதை நினைந்து நினைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து பாராட்டுகிறேன். இன்ன துறையில் இன்ஞர் பயன்படுவார் என அறிந்து அவர்களைப் பயன்படுத்தும் ஆற்றலைப் பெற்றிருந்த அவர்களைத் தமிழே தம் மூச்சாக வாழ்ந்த அவர்களைப் பாராட்டுகிறேன். அவர் தம் குடும்பத் தார்க்கு எனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளு கிறேன்.''

மைய அரசின் முன்னுள் நிதி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள்:

''திரு. சுப்பையா பிள்ளை அவர்களுடைய ஆற்றலைப்பற்றி யும், தொண்டுகளைப்பற்றியும் மட்டும் பாராட்டுவதற்காக நான் வரவில்லை. நான் அவர்களை 30 ஆண்டுகளாக அறிவேன். அவர் என்னிடம் வந்தபோதெல்லாம் தம் உறவினர்களுக் காகவோ, நண்பர்களுக்காகவோ எந்த சிபாரிசினை நாடியும் வந்தவரல்லர். வரும்போதெல்லாம் கழகத்தைப்பற்றியும், நூலகத்தைப் பற்றியும் தமிழ் வளர்ச்சிபற்றியுந்தான் பேசுவாரே தவிர நான் ஓர் அமைச்சர் என்ற முறையிலே என்னிடத்திலே சொந்தக் காரியங்களுக்காக அவர் வந்ததே யில்லை. அந்த வகை யிலே மற்றவர்களுக்கு ஒரு வழிகாட்டியாக வாழ்ந்த அவரது பணி தொடர வேண்டும், அதற்கேற்ற சூழ்நிலையைத் தமிழக மக்களும் தமிழக அரசும் ஏற்படுத்த வேண்டும்.''

உயர்நீதி மன்ற நடுவர் திரு. இரத்தினவேல் பாண்டியன் அவர்கள் :

''தமிழுக்கு ஒரு மண்டபத்தை அமைத்துக் கொடுத்தது போன்ற—ஒரு பெருமை திரு. சுப்பையா பிள்ளை அவர்களைத் தான் சாரும். தமிழுக்காகத் தொண்டாற்றிய நெல்லை மாவட் டத்தைச் சேர்ந்த பெரியவர்கள் வரிசையில் நம்முடைய திருவரங் கம் பிள்ளையைப்பற்றித் தமிழ்க் கலைக்களஞ்சியத்தில் எதுவுமே காணப்படவில்லை. இனிமேல் வருகிற பதிப்பிலாவது இவர்கள் பெயரும் பணியும் இடம்பெற வேண்டும்.

அமைச்சர் மாண்புமிகு கே. ஏ. கிருட்டிணசாமி அவர்கள் :

அமைச்சர் அவர்கள் பேசும்போது கழக ஆட்சியரின் தமிழ்ப் பணிகளையும், நூற்பதிப்புத் திறத்தினையும், கழகத்தின் பிற பணி

களையும் பாராட்டி, கழக ஆட்சியர்க்குத் தமது அஞ்சலியைத் தெரிவித்துக் கொண்டார்.

**சட்ட மன்ற மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்கள்:**

"திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் தமக்கென ஒரு சரித்திரத்தைப் படைத்துக்கொண்டவர். தொண்டு மனப்பான்மை ஒன்றையே கொண்டு அவர் சங்க இலக்கியங்களைப் பதிப்பித்தார். ஒரு காலத்தில் எல்லாவற்றையும் கலப்புத் தமிழாகச் செய்திட வேண்டும் என ஒரு பெருங்கட்சி வேலை செய்தது. அப்போது தனித் தமிழ் வளர்ச்சிக்கு மறைமலையடிகளார்க்கு வலக் கையாக இருந்தவர், அவர் மறைந்த பிறகு அவர்களுடைய எழுத்துகள், பதிப்புகள் எல்லாவற்றையும் காப்பாற்றி வைத்து அவற்றைக் காட்சியில் வைத்துக் காட்டிய பிறகுதான் நான் மறைமலையடிகளாரைப்பற்றியே தெரிந்துகொண்டேன். மறைமலையடிகளார் நூல்நிலையம் அமைத்து வள்ளலார் திருவருள் மண்டபம் அமைத்து அவர் ஆற்றிய பணிகள் மிக அருமையானவை"

"தமிழ்ப் பண்பாடென்றால் அது சுப்பையா பிள்ளையைப் பார்த்தால் தெரிந்துவிடும். சைவப் பண்பாடு எப்படியிருக்கும் என்றால் அதுவும் சுப்பையா பிள்ளை அவர்களைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.

**நூல் வெளியீடு**

திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் தம் இறுதிக் காலத்தில் விரும்பிப் பதிப்பித்த, வி. ஆர். இராமச்சந்திர தீட்சிதர் அவர்கள் இயற்றிய Studies in Tamil Literature and History என்னும் நூலினைச் சுற்றுலா அமைச்சர் மாண்புமிகு இராம வீரப்பன் அவர்கள் வெளியிட, டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்கள் அதனைப் பெற்றுக் கொண்டார்கள். அடுத்து அமைச்சர் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கம்.

"மறைந்த பெரியவர் தமிழ் இலக்கியங்களை மட்டும் வெளியிட்டவர் என்ற சிறப்பினை மட்டும் பெற்றவரல்லர். இந்தியை எதிர்த்துக் குரல் கொடுத்தோரில் மறைந்த வ. சு. அவர்கள் முதன்மையானவர். அதற்கென்றே ஓர் இயக்கங் கண்டவர்; மேலாடைகளில் 'தமிழ் வாழ்க' என அச்சடித்தவர்.

"வ. சு. போன்ற தலைவர்கள் இளைஞர் தலைமுறைக்கு அறிமுகப்படுத்தப்பட வேண்டியவர்கள். தொலைக்காட்சி நிலையத்தார் அவரது மறைவைச் செய்தியாகப் போட்டுக் காட்டினரே

தவிர, இந்த நாட்டிற்குச் சொல்ல வேண்டிய பெரியவர் மறைந்து விட்டார் என்கிற உணர்வு அந்தத் தொலைக்காட்சி நிலையத்தார்க்கு வரவில்லை.

"பதிப்பாளர் இல்லாவிட்டால் எழுத்தாளர் இல்லை; எழுத்தாளர் இல்லையென்றால் இலக்கியம் ஏது? இலக்கியம் இல்லையானால் மொழி வளர்ச்சி ஏது? எனவேதான் பதிப்பாளராகிய திரு. வ. சு. அவர்களை நாம் பாராட்டுகிறோம். தமிழ் வளர்ச்சித் துறை பதிப்பாளர்கட்கும் இனி நிதி உதவி செய்ய வேண்டும்.

"கலைக்களஞ்சியத்தை மீண்டும் வெளியிட மாண்புமிகு முதல்வர் அவர்கள் ஆணை பிறப்பித்திருக்கிறார்கள். ஆகவே தொடர்ந்து வரவிருக்கிற கலைக்களஞ்சியத்திலே இப்படிப்பட்ட சான்றோர்களின் பெயர்கள் நிச்சயம் இடம் பெறும் என்பதை நான் பணிவன்போடு தெரிவித்துக்கொள்கிறேன்.

"தமிழகத்திலிருக்கிற கல்லூரிகள் அனைத்திலும் வ.சு. அவர்களின் நினைவு நாளை நடத்துங்கள். மறைந்த வ. சு. அவர்கள் யார் என்பதைத் தெரிவியுங்கள்—அவர்தம் வரலாற்றை மாணவருலகிற்குக் கூறுங்கள். அதற்கு ஏற்பாடு செய்யுங்கள் என்று கல்லூரிக் கல்வி இயக்குநர் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்."

அடுத்து எஸ். ஐ. இ. டி. கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் சிவ. சிவராமலிங்கம் அவர்கள் மறைந்த வ. சு. பிள்ளை அவர்களைக் குறித்து, கீழ்க்காணும் இரங்கற்பாவினைப் பாடினார் :

## ஐயா எங்கே?

[பேராசிரியர் சிவ. சிவராமலிங்கம், எம்.ஏ.

தமிழ்த்துறைத்தலைவர், எஸ். ஐ. இ. டி. கல்லூரி, சென்னை]

அவர் எங்கே ஐயா
அவர் எங்கே?
தவராச சிங்கமெனத் தமிழ்காத்து நின்றபுகழ்ச்
சிவஞானப் பழமான திருவாளர் சுப்பையா
—அவர் எங்கே

ஆட்சிசெயும் அரசினரும் அறிவார்ந்த அமைச்சர்களும்
மாட்சிமையாய்த் தமிழ்வளர்க்கும் மதிப்புடைய பெரியோரும்
காட்சிதரும் அரங்கத்தைக் கண்ணெதிரே காணாமல்
சேட்சென்று பார்த்திருக்கும் செந்தமிழின் செல்வரெனும்
—அவர் எங்கே

சிவநெறியும் தமிழ்மொழியும் திகழ்ந்தோங்கக் காலமெலாம்
தவமியற்றிப் புகழ்சேர்த்துத் தனிமனித முயற்சியினால்
உவமைசொல இயலாத உயர்கழகம் அமைத்தந்நாள்
நவநவமாய்த் தமிழ்நூல்கள் பதிப்பித்து வெளியிட்ட
—அவர் எங்கே

பழங்காலத் தமிழ்நூல்கள் பதிப்பித்து வெளியிடற்குக்
கழகத்தை நடத்திவந்து காசினியே போற்றுவணம்
அழகான வடிவினிலே ஆராய்ச்சி யுரைகளுடன்
பிழையின்றி யச்சிட்டுப் பேழைகளில் தந்திட்ட
—அவர் எங்கே

மறைமலைப்பேர் நூலகத்தை மாத்தமிழை ஆய்வதற்கு
நிறைநிலைய மெனவாக்கி நிதம்நூல்கள் பலசேர்த்துக்
குறையுணரா வகையினிலே கோடிநலம் யாவர்க்கும்
இறையெனவே வழங்கியருள் ஈந்திங்கு இருந்திட்ட
—அவர் எங்கே

வாணிபத்தைக் கருதாமல் வளர்தமிழின் தரம்போற்றிக்
காணினிய நூல்களையே கழகவழி வெளியிட்டுப்
பேணிடும்நல் பெருந்தகையாய்ப் பேரறிவுப் பெட்டகமாய்
ஆணிப்பொன் அம்பலவன் அடிபோற்றி வாழ்ந்திட்ட
—அவர் எங்கே

எழுத்தாற்றல் மிக்கவரை ஏற்றவகை தேர்ந்தெடுத்துப்
பழுத்ததம தனுபவத்தின் பயனாகக் கருத்துக்கள்
அழுத்தமுறக் கொடுத்துதவி ஆதம்நூல் எடுத்தீந்து
முழுப்பயனும் பெற்றளித்த முயற்சிமிகு நல்முனிவர்
—அவர் எங்கே

பன்னெடுநாள் பழகிடினும் பாராட்டிப் பேசிடினும்
தொன்னலமார் தமிழுக்குத் தொண்டுசெயும் கழகத்தை
முன்னேற்ற வருவார்க்கே முதலிடத்தைக் கொடுத்தென்றும்
தன்னலமே கருதாத தகைசான்ற பெருமகனார்
—அவர் எங்கே

சுறுசுறுப்புத் தமிழ்த்தேன் சொக்கப்பொன் தமிழ்ச்சுரங்கம்
விறுவிறுப்புக் குறையாத வெற்றிவிளை வினைத்திட்பம்
மறுப்புரைக்க வந்தாலும் மதிப்பளித்து வரவேற்று
பொறுப்பாகப் பதில்கூறும் புகழார்ந்த ஒருசீலர்
—அவர் எங்கே

தனித்தமிழின் தந்தையெனத் தரணிபுகழ் மறைமலையின்
இனித்தநறும் கொள்கைகளை ஏற்று நிதம் பரப்புவதே

மனித்தவுடல் தாங்கியதன் மாப்பயனுய்க் கொண்டிங்குப்
பனித்தமொழிச் செல்வரெனப் பாராட்டுப் பெற்றிட்ட
—அவர் எங்கே

இலக்கணங்கள் இலக்கியங்கள் ஏற்றஉரை யுடன்சேர்த்து
பலப்பலவாம் துறைநூல்கள் பாடுபட்டுப் பதிப்பித்து
நிலம்புகழும் பான்மையினில் நெஞ்சார்ந்த கழகவழி
சலசலப்புக் கஞ்சாமல் சாதனைகள் புரிந்திட்ட
—அவர் எங்கே

எண்ணரிய புலவர்களின் இசைமிகுந்த வரலாற்றை
எண்ணிஎண்ணிச் சேர்த்தெழுதி ஏட்டினிலே வாழ்வளித்த
திண்ணியநூல் வித்தகராய்த் திறமுடைய சான்றோராய்
புண்ணியம்செய் காவலராய் பூந்தமிழர் வாழ்த்திசைத்த
—அவர் எங்கே

அண்ணாவும் பெரியாரும் அரும்புரட்சிக் கவிஞருமே
கண்ணாரக் கண்டுநிதம் களித்திடவே மொழித்தொண்டு
தண்ணார்ந்த தமிழ்நாட்டின் தனிப்பெருமை காத்திடவே
எண்ணாத வகையிலெல்லாம் ஏற்றவகை செய்துயர்ந்த
—அவர் எங்கே

தமிழோங்கச் சிவமோங்கத் தரமான நூலோங்க
அமிழ்தாகும் நட்போங்க அருங்கடமை தானோங்க
இமிழ்கடல்சூழ் உலகோங்க இனிமையெலாம் மிகவோங்கத்
தமியோராய்ப் பணியாற்றி நாமேங்கச் சென்றிட்ட
—அவர் எங்கே

## நெல்லையில் நினைவுக்கூட்டம்

கழக ஆட்சியர் வ. சு. அவர்களின் நினைவுக் கூட்டம் திருநெல்வேலி, வ. சு. பிள்ளை இலக்கிய வட்டத்தின் சார்பில் 16-2-83 அன்று மாலை, நெல்லை நகர் பாரதியார் தெருவிலுள்ள அருள்மிகு காமாட்சி மண்டபத்தில் நடைபெற்றது. திருமிகு இராமலிங்க தேசிகர் அவர்கள் இறை வணக்கப் பாடல்கள் பாடியபின், கழக இலக்கியச் செம்மல் இரா. இளங்குமரன் அவர்கள் கூட்டத்திற்குத் தலைமை தாங்கி ஆட்சியர் வ. சு. அவர்களின் பண்பு நலன், புலவர்களைப் போற்றும் பெற்றி, பதிப்புத் துறையில் காட்டிய திறன், அவருக்கும் தமக்குமிருந்த தொடர்பு என்பனபற்றி விரிவாகப் பேசினார். நெல்லை, பாளை, தூத்துக்குடி நகர் மன்றங்களின் தனி அலுவலர் திருமிகு உ. சிவதாணு பிள்ளை எம்.ஏ., பி.எல். அவர்கள் தாமரைச்செல்வர் வ. சு. அவர்

களின் திருவுருவப் படத்தினைத் திறந்து வைத்து உரையாற்றி னார்கள்.

அடுத்து திரு. வ. சு. அவர்களின் சமயப்பணி என்னும் பொருள்பற்றி, செஞ்சொற் செல்வர் தி. சு. மணி, பி.ஏ., அவர்கள் உரையாற்றினார். நெல்லை, தமிழகத் தெய்வச் சேக் கிழார் மன்றத்தைச் சேர்ந்த தி. வை. சங்கரக்குமாரு அவர்கள் 'கழகப்பணி' என்பதுபற்றிச் சொற்பொழிவு வாற்றினார். முனைவர் வித்துவான் திரு. க. சுப்பிரமணியன், எம்.ஏ., அவர்கள் 'இந்தி எதிர்ப்பில் ஆற்றிய பணி' என்னும் பொருள்பற்றிப் பேசு கையில் இந்தி எதிர்ப்பின்போது எவ்வாறெல்லாம் ஆட்சியர் அவர்கள் தமிழ்காப்புப் பணிகளை மேற்கொண்டார் என்பதை விளக்கிப் பேசினார். சிந்து பூந்துறை சைவ வேளா ளர் பேரவையைச் சேர்ந்த திரு தி. வ. கல்யாணசுந்தரம், எம்.ஏ. பி.டி.. அவர்கள் 'நூலகத்துறைப் பணி' என்பதுபற்றியும், தனித் தமிழ் இலக்கியக் கழகத் தலைவர் அருள்மொழிச் செல்வர், பேரா சிரியர் திரு. பா. வளனரசு எம்.ஏ., பி.எட்., அவர்கள் 'மதிப்பு மிகு பதிப்பாசிரியர்' என்பது பற்றியும், புலவர் தி. சு. ஆறுமுக னார் அவர்கள் 'தமிழ் அர்ச்சனைக்குச் செய்த பணிகள்' என்பது பற்றியும், நெல்லை, சைவ வேளாளர் பேரவைத் தலைவர் திரு. ப. இலக்குமணன் அவர்கள் 'புலவரைப் போற்றும் புகழ்மை' என்பது பற்றியும், நெல்லைக் கண்ணன் அவர்கள் 'நெல்லையில் கழகப் பணி' என்பதுபற்றியும், நெல்லை, திருவள்ளுவர் கழகத் தலைவர் டாக்டர் மு. சுந்தரவிநாயகன் அவர்கள் 'இலக்கியப் பணி' என்பதுபற்றியும், திரு. மு, சு. சங்கர் அவர்கள், 'திருமுறைக்கு ஆற்றிய பணி' என்பது பற்றியும், வித்துவான் ச. கண்ணபிரான் எம்.ஏ., பி.எட்., அவர்கள் 'இலக்கணப் பணி' என்பதுபற்றியும், நெல்லை நகர் மன்ற மகளிர் மேனிலைப் பள்ளித் தமிழாசிரியர் ந. பாலம்மாள் அவர்கள் 'மகளிர்க்குச் செய்த பணிகள்' என்பது பற்றியும், வித்துவான் ஆ. பழனியாண்டி எம்.ஏ., அவர்கள் 'மொழிபெயர்ப்புப் பணி' என்பதுபற்றியும், திரு. கா. ஆறுமுகப் பெருமாள் அவர்கள் 'பலி விலக்கில் ஆற்றிய பணி' என்பது பற்றியும், கவி. குறளேருழவர் அவர்கள் 'திருக்குறள் பணி' என்பதுபற்றியும், புலவர் தி. ச. நாராயணன், பி.லிட்., அவர்கள் 'நாடகப் பதிப்புப் பணி' என்பதுபற்றியும், உட்லண்ட்ஸ் திரு. இல. இராமகிருட்டிணன் அவர்கள் 'கவிதைப் பணி' என்பது பற்றியும் அரிய உரையாற்றினர். இந்நாள் கழக ஆட்சியாளர் திரு. இரா. முத்துக்குமாரசுவாமி, எம்.ஏ., பி.லிப்., அவர்கள் ஏற்புரை வழங்கக் கூட்டம் நிறைவுற்றது.

———

# மதுரையில் நினைவுக்கூட்டம்

மதுரைக் கிளைக் கழகத்தின் சார்பில் 18—2—83 அன்று மாலை, மதுரை வடக்காடி வீதியிலுள்ள திருவள்ளுவர் கழக மண்டபத்தில் கழக ஆட்சியர் வ. சு. நினைவுக் கூட்டம், மதுரை மாவட்ட நீதிபதி உயர்திரு. தே. பெ. சு. பழநிசுவாமி அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

தாமரைச் செல்வர் வ. சு. ஐயா அவர்களின் திருவுருவப் படத்தைத் தமிழ்மறைக் காவலர் கி பழநியப்பனார் அவர்கள் திறந்து வைத்துப் பேசுகையில், நூல் வெளியீட்டுத் துறையில் எனக்கு அனுபவமுண்டு. அது ஏமாற்றம் தரும் தொழில்; அவ்வாறிருந்தும் சைவத்தையும் தமிழையும் வளர்க்க வேண்டுமென்று வ. சு. அவர்கள் இத் துறையில் ஈடுபட்டார்கள். கழகம் தோன்றியிரா விட்டால் பல நல்ல நூல்களை இழந்திருப்போம் சுப்பையா பிள்ளை விற்பனையாகாத நூல்களை அவற்றின் அருமை கருதி வெளியிட்டார்கள். அவர்கள் பதிப்பித்த நூல்கள் படித்துவிட்டுத் தூர எறிவதற்கானவையல்ல. அவை படித்துப் போற்றிப் பாது காக்கப்பட வேண்டியவை.

"வ. சு. தனித் தமிழில் நூல்களை வெளியிட்டார்கள். பழைய நூல்களைத் தேடிப் பிடித்துப் பிழையில்லாமல் பதிப்பித்தார்கள். கடைசிவரை தாமே புரூப் பார்த்து நூல்களை அச்சிட்டார். பம்பாயிலுள்ள பாரதீய வித்யா பவன் ஆங்கில நூல்களை வெளியிட்டு வருவது போலத் தமிழ் நூல்களைக் கழகம் வெளியிட்டு வருகிறது. இத்தனைக்கும் காரணமாக இருந்த சுப்பையா பிள்ளை மறைந்தது நமக்கெல்லாம் பேரிழப்பாகும்." என்று குறிப்பிட்டார்கள்.

கூட்டத்திற்குத் தலைமை தாங்கிய மதுரை மாவட்ட நீதிபதி உயர்திரு. தே. பெ. சு. பழநிசுவாமி அவர்கள், "கழக ஆட்சியர் திரு. வ. சு. பிள்ளை அவர்கள் முக்கியமாக மூன்று குறிக்கோள்களுக்காக வாழ்ந்தார்கள். அவை தமிழ்மொழி வாழ வேண்டும், குறள் நெறி எங்கும் பரவ வேண்டும், இவற்றுக்கு அடிப்படையாகக் கழகம் நிலைத்து நீடினிது வாழ வேண்டும் என்பனவாகும்" என்று குறிப்பிட்டார்கள்.

அடுத்து முனைவர்கள் சுப. அண்ணாமலை, கு. பரமசிவம், சொல்விளங்கும் பெருமாள், வீ. ப கா. சுந்தரம், ம. நவநீத கிருட்டிணன், மீனாட்சி முருகரத்தினம், பேராசிரியர்கள், தமிழ்க் குடிமகன், ந. சேதுரகுநாதன், புலவர் மணி, தி. கி. சுந்தர மூர்த்தி பண்டித வித்துவான் மீ. கந்தசாமிப் புலவர், பண்டித வித்துவான் சாம்பசிவனார், பேராசிரியர் ம. கிருஷ்ணன், புலவர் அ. கி. செல்வக் கணபதி, கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன் ஆகியோர் கழக ஆட்சியர் திரு. வ. சு. அவர்களின் பணி நலன்கள்பற்றிப் பாராட்டிப் பேசினர்.

# இரங்கலுரைகள்

கழக ஆட்சியர் வ. சு. அவர்களின் மறைவு குறித்து அன்பர்கள் பலர் தொடர்ந்து இரங்கல் உரைகளும், பாக்களும் அனுப்பியவண்ணமுள்ளனர். அவை அனைத்தையும் முழுமையாக வெளியிட இயலாத நிலையில் அவற்றின் சுருக்கக் கருத்துகள் மட்டுமே ஈண்டுத் தரப்படுகின்றன.

## கொள்கைச் சான்றோர்

'கழகம் மட்டும் இல்லை என்றால்' என்று எதிர்மறையாகச் சிந்திக்கும்போதுதான் கழகத்தின் ஞாலத்தின் மாணப்பெரிய பணிகள் நமக்குத் தெளிவாகும். தனியொரு அரசு மட்டுமே செய்யக்கூடிய தொண்டுகளைத் தனியொரு கழகம் எத்துணையோ இடர்ப்பாடுகளுக்கும், எதிர்ப்புகளுக்கும் இடையில் சாதித்திருக்கிறது என்றால் அது தமிழ் வரலாற்றின் பொன்னெழுத்துப் பகுதியாகும். நூல்களைப் பதிப்பித்து வெளியிடுவதோடு அமையாது தமிழ் மாநாடுகளையும் கருத்தரங்கக் கூட்டங்களையும் தக்கோர்களைக் கொண்டு கூட்டித் தமிழாய்ந்த பெருமகனார் திரு. பிள்ளை அவர்களாவர். காலத்தால் மூவாத கன்னித் தமிழ்வளர்த்த முச்சங்கங்களுக்குப் பிறகு நான்காவது தமிழ்ச் சங்கமாகவே கழகம் நம் கண்களுக்குக் காட்சியளிக்கிறது. தமிழைப் போலவே எளிமையும், நீர்மையும் உடைய கொள்கைச் சான்றோராக வாழ்ந்தவர் பிள்ளையவர்கள். ஆடல்வல்லானின் திருவடி நீழலில் ஆட்கொள்ளப்பட்ட அப் பெருமகனாரைப் போற்றிப் பாவிடுவோம்.

—சை. வே. சிட்டிபாபு
துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

## என்று நான் காண்பேன் இனி?

1961ஆம் ஆண்டு நான் வேலையில்லாது அலைந்துகொண்டிருந்தபோது நான் முன்பே எழுதிக் 'குமரகுருபரனில்' வெளியிட்டிருந்த ஒரு கட்டுரையைப் படித்ததும் உடனே என்னைக் கழகப் பணிக்கு ஆளாக்கிவிட்ட பெருந்தகைமையை உன்னி உன்னி உளம் உருகுகிறேன்.

—பேராசிரியர் மு. சதாசிவம்
ஈரோடு

## பாவாணருக்குப் பின்!

என் தந்தையார் அவர்களின் மறைவிற்குப் பின்னரும் கழக ஆட்சியாளர் அவர்கள் எங்கள் குடும்பத்தின் மீது அன்பும் அக்கறையும் காட்டி வந்தார்கள். நான் அவர்களைக் காணச் செல்லும்போதெல்லாம் இன்முகத்தோடு வரவேற்பார்கள். நான் அவர்களிடம் தனிமையில் பேசிக்கொண்டிருக்கும் நேரங்களில் ஒரு தந்தையைப்போல் அவர்கள் எனக்குக் கூறிய அறிவுரைகள் இன்றும் என் உள்ளத்தில் அலை மோதிக்கொண்டிருக்கின்றன. இந்த அளவிற்கு அவர்கள் எங்கள் குடும்பத்தின்மீது அன்பு காட்டியதற்குக் காரணம் பாவாணரின் குடும்பம் என்பதற்கு அல்ல. ஒரு தமிழ் அறிஞரின் குடும்பம் என்பதற்கே. அந்த அளவிற்கு அவர்கள் உள்ளத்தில் தமிழ்ப் பற்றும் தமிழன் பற்றும் குடி கொண்டிருந்தன

—தே. மணி
(பெருஞாயிறு பாவாணரின் மகன்)

## ஒளி மிகுந்த காலம் மறைந்துவிட்டது!

தமிழ் இலக்கிய நூல்கள் வெளியீட்டு வரலாற்றில் நிலவிய ஒளி மிகுந்த காலம் மறைந்துவிட்டது. தமிழுக்கும் சமயத்திற்கும் தளராது பணியாற்றி வந்த ஆன்மா அடங்கிவிட்டது! எங்கெல்லாம் எழுத்தாற்றல் இருந்ததோ அங்கெல்லாம் சென்று ஊக்குவித்து ஒலித்த குரல் ஒடுங்கிவிட்டது!

—மா. சண்முக சுப்பிரமணியம்
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சை

## பெருமை பெற்ற சான்றோர்

தமிழால் வாழ முற்படுகிறார்கள் பலர். தமிழுக்காகத் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணித்துக்கொண்டு அரும்பணி புரிவதில் ஈடுபடுகிறார்கள் சிலர். தமிழ்மொழிக்கு வளமும் சிறப்பும் சேர்ப்பதுடன், சைவம் தழைப்பதற்காகவும் தங்கள் வாழ்நாளை ஈடுபடுத்தி உழைத்துப் பெருமை பெற்ற ஒரு சில சான்றோர்களில் தாமரைத் திரு. சுப்பையா பிள்ளை அவர்களும் ஒருவராகத் திகழ்ந்தார்கள். அவர்கள் வளர்த்த நிறுவனங்கள் என்றும் அவர்களது பெயர் சொல்லி நிலைத்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

வல்லிக்கண்ணன்
சென்னை

## தமிழ் முனிவர்

"இந் நூற்றாண்டின்கண் நம் கண்ணெதிரே வாழ்ந்து, அல்லும் பகலும் நம் தமிழன்னையின் மேம்பாட்டிற்கென அயரா துழைத்த அருந்தவ முனிவர் தமிழ்த் தாயின் தலைமகனாகப் போற்றத்தக்க சைவ சித்தாந்தக் கழக ஆட்சியாளர், தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை ஆவார்கள். இக்குறுமுனிவர் தோற்றத்தாலும் குறுமுனிவரே. அக்குறிய வடிவத்துள் புதைந் திருந்து வெளிப்பட்டு நிலவிய ஆற்றலை எவரே எடுத்தியம்ப வல்லார்?''

**புலவர் பா. நாராயணன்,**
ஆத்தூர்

## முப்பணியாற்றிய மூதறிஞர்

அரை நூற்றாண்டுக்கு மேலாக அவர்கள் சிவநெறிப் பணி, செந்தமிழ்ப்பணி, சமுதாயப் பணி இவற்றில் ஈடுபட்டுச் சிறந்து விளங்கினார்கள். அவர்கள் மறைவு தமிழ் நல்லுலகிற்கு ஈடு செய்ய முடியாத பேரிழப்பாகும்.

**எல். நாராயண செட்டியார்**
மதுரை

## வழிகாட்டும் ஒளியாகட்டும்

அவர்கள் தொட்டது துலங்கிற்று. கால் பட்டது விளங் கிற்று. தேனீ போன்று ஓய்வு ஒழிவின்றிச் செந்தமிழ் நாட்டிற் காகப் பாடுபட்டுச் சேர்த்த நூல்கள் பல்லாயிரக் கணக்கானவை-அச்சேறியது—ஓராயிரத்துக்கும் அதிகம்—என்பதை எண்ணும் போது மனம் இன்களி மகிழ்நகை எய்துகிறது. செந்தமிழ் உள்ளளவும் ஐயாவின் பெயரும் இவ்வுலகில் நிலைத்து நிற்கு மென்பதில் ஐயமில்லை. திக்கெலாம் புகழ் திருநெல்வேலியிற் பிறந்து பார்புகழப் பல்லாண்டு நிறை வாழ்வு வாழ்ந்து வானுறை யும் தெய்வமாகிவிட்ட ஐயாவின் வாழ்க்கை நமக்கு வழிகாட்டும் ஒளியாகத் திகழட்டும்.

**—சிவகலை. மு. சுப்பையா**
மேட்டுப்பாளையம்

## அவர் வளர்த்த குழந்தைகள்!

கழகமும் மறைமலை அடிகள் நூலகமும் அவர் வளர்த்த குழந்தைகள். அவை மேன்மேலும் விருத்தி அடைந்து அவரது புகழினைக் கூறிக்கொண்டிருக்கும்.

**—டாக்டர் பிரேமா நந்தகுமார்**
விசாகப்பட்டினம்

## அழியாத தொண்டு

பெரியவர் திரு. வ. சு. அவர்களின் தமிழ்த்தொண்டு எக்காலத்தும் அழியாத ஒன்று; தமிழ் உள்ளவரை அவர்களின் திருப்பெயர் நின்று நிலவும். தி. க. சிவசங்கரன்

மற்றும் கீழ்க்காணும் அன்பர்களிடமிருந்தும் இரங்கற் செய்திகள் வந்துள்ளன :

"கவிஞர்கோ" "பொற்கிழிக் கவிஞர்" அரு. சோமசுந்தரன், காரைக்குடி; புலவர் ஆ. பழனி, காரைக்குடி; இரா. முத்துக் குமாரசாமி, எம்.ஏ., பி.எட்., வாலாஜாபாத்; கா. முருகையன், காரைக்குடி; ஏ. சங்கரசதாசிவம், சைவ வேளாளர் சங்கம், ஆழ்வார் திருநகரி; வீ. குமாரசாமி ஐயர், மயிலம்; திரு. அருணசலம், புக் சென்டர், மாம்பலம் சென்னை; ஆ. நாகலிங்கம், பட்டாபிராம்; இராம. சுப்பிரமணியம், தமிழ் வளர்ச்சி மன்றம், சென்னை; ரம்போலா மாஸ்கரேனஸ், தலைவர் டாக்டர் இராசமாணிக்கனர் இலக்கிய மன்றம், திருச்சி; இலஞ்சி அ. இ. முத்துக்குமாரசாமி பி. ஏ., திருநெல்வேலி; கோ. கணேசன், மயிலாடுதுறை; புலவர் நா. பாலசுப்பிரமணியன், பண்ணைக்காடு; மு. பெருமாள் ஆதம் பாக்கம்; சா. பாலகிருஷ்ணன், பதிப்பாசிரியர், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்; புலவர் மு. வைத்தியநாதன், திருச்சி; திருமதி நவநீதம் ஆலாலசுந்தரம் செட்டியார், தாம்பரம்; பி. சுந்தரமூர்த்தி, சேயார், ஆரணி; பு. அ. சுப்பிரமணியன், திருக்குறள் கழகம், புதுக்கோட்டை; ந. ரா. முருகவேள், ஆசிரியர் திருக்கோயில் சென்னை; நா. பா. தணிகை அரசு, வாலாஜாபாத்; பி. சரவணன், சென்னை-14.

---

## உனை உலகம் பாராட்டும்

[பேராசிரியர் ந. சேதுரகுநாதன்]

மிகுநயஞ்சேர் சுப்பையா வேளேதா
மரைச்செல்வா மேன்மை யோனே
நகுநயமும் தகுமொழியும் விருந்தொழுங்கும்
நின்னைப்போல் நாட்டுவோர் யார்?
தொகுநயஞ்சேர் தமிழ்வளர்த்த தூயோரில்
நினையொத்த தொல்லோர் யாரே
உகுகண்ணீர் வெள்ளத்தில் யாம்வருந்த
உம்பர்தொழ உயர்ந்த கோவே!

வேறு

ஊழிதோ றூழி யுனை யுலகம் பாராட்டும்
ஆழிசூழ் இவ்வுலகம் அன்னையெனக் கொண்டாடும்
பேரா இயற்கையினைப் பெற்றவுனை யென்னாளும்
சீராகப் போற்றும் தெளிந்து.

# இரங்கற் பாக்கள்

## தமிழாய் வாழ்வான்!

**[புலியூர்க்கேசிகன்]**

அமரராச் சென்ருே ரான
  அருந்தமிழ் வல்லா ரோடே
ஒருவனுச் சேரற் கெண்ணி
  உம்பர்நா டடைந்தா னேனும்,
அயலுளார் போற்றி வாழ்த்த
  அருந்தமிழ்த் தாயின் ஏற்றம்
செயலிலே காணற் குள்ளம்
  சேர்ப்பவர் சிந்தை நிற்பான். (1)

ஒன்றிலே உளத்தைச் சேர்த்தான்;
  உயர்தமிழ் உயர்த்தி வாழ்ந்தான்;
ஒன்றியே தமிழோ டென்றும்
  உலவியே உயர்ச்சி பெற்ருன்;
இன்றுநாம் காணற் கேலா
  தேகினன் எனினும், நெஞ்சில்
நன்றுமே வாழ்வான்; நாவில்
  நடம்பயில் தமிழாய் நிற்பான்! (2)

தமிழுக்கே தாழ்ச்சி நேர்ந்தால்
  தணலெனக் கொதித்தே நிற்பான்;
புகழுக்கே நாட்டம் கொள்ளான்
  புலியெனச் சீற்றம் கொள்வான்;
தமிழுக்கே தலைமை மேன்மை
  தனிநிலை காண வாழ்ந்தான்;
புகழுக்கே புகழாய் நின்ருன்;
  போற்றும்எம் தமிழாய் நிற்பான்! (3)

அரங்கனுர் இளவல் என்றே
  அமைவுறத் தோன்றி அன்னுர்
திறனெலாம் செறியப் பெற்றே
  தீந்தமிழ்ச் சைவம் பேணி
உரனெலாம் ஒருங்கே கூட்டி!
  உலகெலாம் போற்ற வாழ்ந்தான்;
மறனெலாம் மறவா அன்பர்
  மனத்தினில் மணந்தே நிற்பான்! (4)

காலமே வென்றி கொண்ட
கனித்தமிழ்க் கவினே காத்துக்
கோலமார் தமிழ நூற்கள்
கொள்கெனப் பதித்தே நல்கி
ஞாலமே வாழ்த்த வாழ்ந்த
நாயகன் சுப்பை யன்தான்
சீலமார் தமிழர் நெஞ்சில்
செந்தமிழ் நலனாய் நிற்பான்! (5)

ஏங்குபேர் ஏக்கம் உற்றார்
இதயத்தே எரியாய்ப் பொங்கத்
தாங்குமோர் சக்தி யற்றே
தளர்ந்திடப் பிரிந்தா னேனும்,
நீங்கிடான் தமிழர் நெஞ்சில்;
நிலைத்துநற் றமிழாய் என்றும்
ஓங்குவான்; உயர்வான்; ஞாலம்
உயர்புகழ் குவிக்க வாழ்வான்! (6)

முருகனும் சேயோன் ஞான
முதல்வன்சுப் பையன் பேரே
ஒருவனுக் கொண்டான் இங்கே
உழைப்பினால் உயர்ந்தே வாழ்ந்தான்;
உருவந்தான் கழித்தே இந்நாள்
உம்பர்நா டடைந்தா னேனும்
அருவத்தால் தமிழர் நெஞ்சில்
அமரனாய் நிலைத்தே நிற்பான்! (7)

பனிவரும் கண்க ளோடே
பலப்பல நினைவே சூழத்
துனிமிகும் நெஞ்சர் ஆகித்
தொடர்புளார் துடிக்கச் சென்றான்;
இனியவன் உருவும் பேச்சும்
இதயத்தில் கிலக்கும்; எங்கள்
கனியெனும் தமிழ நெஞ்சிற்
கலந்தவன் தமிழாய் நிற்பான்! (8)

———

## 'சாலை வகுத்த சான்றோர்'

[ வேலூர் ம. நாராயணன் எம். ஏ., ]

தமிழெனச் சொல்லிச் சொல்லித்
தனக்கெனச் செல்வம் சேர்க்கும்
உமிதிகர் மாந்த ரெல்லாம்
உயர்நிலை யெய்தும் நாளில்
சிமிழ்சிசிப் பண்ண லாராம்
சுப்பையா பிள்ளை; மண்ணுள்
அமிழ்ந்திடும் சுவடி தேடி
அருந்தமிழ் காக்க லானார்!
மேலைநாட் டிலங்கு கின்ற
மேன்மைகொள் கலைகள் யாவும்
சோலையுள் தென்ற லைப்போல்
தென்மொழிப் புலத்தில் மேவ
சாலைகள் வகுக்க லானார்!
சாந்துணை தமிழைக் கற்றோர்
மூலையில் முடங்கல் கண்டே
முறையான வாய்ப்பும் தந்தார்!

## பணி தொடர வேண்டும்

[க. பெ. பால் முருகன், திருநெல்வேலி]

செந்தமிழ் பரப்பும்
செழுந்தமிழ்ப் புலவரை
செழித்தோங்கச் செய்தவள்ளல்
சென்ற இடம் எங்கே? (1)

தவிக்குதம்மா!—பைந்
தமிழ்ப் புலவர் உளம்
செந்தமிழ்ச் செல்வி அந்தோ
தேற்றுவாளோ? தெளிவாளோ? (2)

அந்தோ! பரிதாபம்
அருந்தமிழர் நிலை
அவள் நிலை ஒருப்பட்டால் அன்றோ
புலவர்தம் பணிதொடர. (3)

இறைவன்தான் அருள வேண்டும்
செல்விபணி தொடரவேண்டும்
தனித்தமிழ்க் காவலன்—அமரர் வ. சு.
அவர்கள்புகழ் பாடவேண்டும் (4)

## வான்புகழ் நாளும் ஓங்குக!

[கி பழநியப்பன், மதுரை]

தாமரைச் செல்வர் தனித்தமிழ்க் காவலர்
தன்னேர் இல்லாச் சித்தாந் தச்சீலர்
மாமறை யாம்திரு முறைகள் யாவும்
வளமிகு சங்கநூல் அனைத்தும் எளிதில்
பாமரர் பண்டிதர் யாவரும் விரும்பிப்
பயின்றிடும் நூலாய் வழங்கிய பெரியார்
மாமதிச் செம்மல் சுப்பையா பிள்ளை
வான்புகழ் நாளும் ஓங்குக உலகெலாம்.

## எவர்தாம் உள்ளார்?

[சு. இலம்போதரன், சென்னை-21]

அருந்தமிழ் நூல்கள் யாத்து
யாரிதைப பதிப்பா ரென்றே
வருந்திடும் அறிஞர்க் கெல்லாம்
வ. சு. வே துணையாய் நின்றார்
பெருந்தமிழ் அன்னை யன்றோ
பேரிழப் புற்றாள்! இன்று
திருவுடை அணிகள் கோக்க
உலகிலே எவர்தாம் உள்ளார்?

## அவர்தம் பணிகள் நீள்க!

[எஸ். பி. சுப்பையா பாரதி, திருநெல்வேலி]

தனித் தமிழ் இயக்கம் மாண்பார்
சைவசித் தாந்தக் கொள்கை
முனைத்துநின் றுழைத்துப் போற்றி
மொய்ம்புற வளர்த்த வீரர்
எனைப்பல அரிய நூல்கள்
எழிலுறப் பதித்த தோன்றல்!
நினைப்பருஞ் சீர்சுப் பையா
பிள்ளையின் பணிகள் நீள்க!

## நெஞ்சில் நிற்பார்

[ந. ரா. முருகவேள், ஆசிரியர், 'திருக்கோயில்']

பிறமொழியில் இருக்கின்ற நூல்கள் எல்லாம்
பெயர்ப்புறவே தமிழ்மொழியில் ஆக்கம் கண்டார்
சிறப்பான நாடகநூல் குறளாம் நூலைத்
தேர்ந்திட்ட அறிஞரையே கொண்டு செய்தார்

மறப்பரிய கவிதைகளைத் தொகுத்துத் தந்தார்
மதுவிலக்கு, பலிவிலக்கில் கடமை யாற்றித்
திறமான செயல்களையே செய்து காட்டிச்
சீர்த்தியுடன் கூத்தபிரான் அடியைச் சார்ந்தார்.
அன்புருவாம் சுப்பையா பிள்ளை சேவை
அன்ருடம் எண்ணுதற்குத் தகுதி சேர்த்தார்
என்றைக்கும் அவர் உருவும் நெஞ்சில் நிற்கும்
இமைக்கின்ற போதெல்லாம் நினைவு தோன்றும்
நன்மையினை நாடுகின்ற அவரின் உள்ளம்
நாயகனூர் நடராசர் சேவை செய்ய
மன்பதையை நீங்கி நல்ல அடியைச் சேர்ந்தார்
வாழ்ந்திடுக அவர்தொண்டு என்றும் நன்றே!

## தமிழுக்குத் தொண்டு செய்தோர் சாவதில்லை

[இரட்டைப் பாவலர்கள்]

நாடறியும் நீர்செய்த நற்றமிழ்த் தொண்டுதனை
ஏடறியும் நன்கறியும் இஞ்ஞாலம்—ஈடற்ற
சான்ருருக்(கு) என்றுமே சாவில்லை எய்தினீர்
பொன்றுப் புகழுடம் பு.
செந்தமிழ்ச் செல்வி செவிலித்தாயா யிருந்து
முந்து தமிழ்ச்செல்வ முத்துக்கள்—தந்ததனை
விண்டுரைக்க நீண்டு விரியுமே பட்டியல்
தொண்டு சிறந்ததென்று சொல்.
மறைமலையார் தம்புகழை மாந்தர்க்குச் சாற்றி
நிறைவளங்கள் தோற்றி நிமிர்ந்து—குறைநீக்கி
அன்னைத் தமிழை அணிதிகழச் செய்துவென்று
நன்னூல்கள் தந்தீர் நமக்கு.
நாமணக்கப் பேசி நனிவளங்கள் கூட்டிய
தாமரைசுப் பையா! நீர் சாகவில்லை—காமணக்கும்
பூமணம்போல் உன்றன் புகழ்மணந்து வாழ்ந்திருப்பீர்
தூமனத் தொண்டால் சுடர்ந்து.

—குமர நடவரச ஈவப்பனுர், சித்தோடு.
—தமிழ்க்குமரன், ஈரோடு.

## சித்தாந்தமே சாய்ந்தனையோ?

[தென்மறை. நித்தலின்பன்]

தென்னிந்தியச் சித்தாந்தமே! சாய்ந்தனைகொலோ தப்பியையோ;
முன்னுந்தின முத்தமிழ்தரு முதுருக்கிளர் சுப்பையா நீ!
பின்னுந்தின நுந்தமையரின் பேரரங்கநற் சைவநலன்
மன்னுந்திட சித்தமெனவே வானெய்திட வைத்தனையால்!

# வ. சு. பிள்ளையும் வ. சு. செ.யும்

[சிவா செங்கல்வராயன்]

தேவார ஒளிநெறிக்கு ஒளிகாட்டியவர் திரு. தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் என்ருல் அது மிகை யாகாது. அன்னாரது நட்பு, சென்னை வடகதிர்காமம் திருப்புகழ்ச் சபைக்கு வரும் வழக்கறிஞர் திரு. வைத்தியநாத அய்யர் அவர்கள் மூலம் கிடைக்கப்பெற்றது. தேவார வகுப்பு நடத்த நானும் இத் திருப்புகழ்ச் சபைக்குச் செல்வதுண்டு. அப்பொழுது ஒருநாள் திரு. வைத்தியநாத அய்யர் என்னிடம் தங்கள் கணவர் தணிகை மணி ஓய்வு பெற்றபின் எப்படிப் பொழுது போக்குகின்ருர் என்று கேட்டார். ஆதியோடந்தமாக நிகழ்ச்சிகளை எல்லாம் விரிவாகவும் தெளிவாகவும் கூற, ''அடடே! அப்படி என்ருல் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தலைவர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் இம்மாதிரி தொண்டுகளையேதாம் ஊக்குவித்து அச்சிட்டு வரு கிருர். அவரை எனக்கு நன்ருகத் தெரியும். அவரை நான் அறி முகப்படுத்தி வைக்கின்றேன்'' என்ருர். அதன்படி ஒரு ஞாயிற்றுக் கிழமையன்று நான் தேவார வகுப்பிற்குச் சென்றபோது என் னுடன் திரு. வ. சு. பிள்ளை அவர்களும் திரு. வைத்தியநாத அய்யர் அவர்களும் என் இல்லத்திற்கு வந்தார்கள். திருப்புகழ்ப் பதிப்பாசிரியர் திரு. வ. த. சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் மகனுராகிய தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை அவ் வமயம் எளிமையாகத் தேவார ஒளிநெறியை எழுதிக்கொண் டிருந்தார். தாமரைச் செல்வருக்குத் தணிகைமணியாரைப் பார்த்தவுடனே ஏதோ ஒன்று அப்படியே ஈர்த்துவிட்டது என்று தான் நான் கூறுவேன். இது முன்தொடர்பு என்றே கூற வேண்டும்.

இந்தச் சமயத்தில் தணிகைமணி சம்பந்தர் தேவாரத்தை முடித்து அப்பர் தேவாரத்திற்கு ஒளிநெறியை எழுதிக் கொண் டிருந்தார். திரு. சுப்பையாபிள்ளை அவர்கள், ''கவலையே வேண் டாம். தாங்கள் பன்னிரு திருமுறைகட்கும் ஒளிநெறியை எழுதிக் கொண்டே வாருங்கள். நான் அச்சிடுகிறேன்'' என்று உறுதி யோடு கூறினர். அந்த அன்பு வார்த்தைகள் வெளிவந்தபோது சொல்லொணுத ஆனந்தமடைந்து இஃது இறைவன் திருவருள் என நானும் என் கணவரும் மிக்க மகிழ்ச்சியடைந்தோம்.

தாம் எழுதும் நூல் வெளிவருவதற்கான ஓர் ஊன்றுகோல் கிடைத்த மகிழ்ச்சியில் தணிகைமணி அவர்களும் முதுமையால்

நோய்வாய்ப்பட்டாலும் அயராது முதல் ஒன்பது திருமுறைகளுக்கு ஒளிநெறியும் ஒளிநெறிக் கட்டுரையும் எழுதி முடித்தார். 9—6—1971 ஆம் ஆண்டு ஒன்பதாந் திருமுறைக்கு ஒளிநெறி, கட்டுரை இரண்டையும் எழுதி 'என்னால் முடிந்தது இவ்வளவுதான்' என்று சொல்லி திரு. வ. சுப்பையா பிள்ளையிடம் தணிகைமணி கொடுத்த காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

தணிகைமணி அவர்கள் திருவிசைப்பா முகவுரையில் கூறியபடி வயது முதிர்ந்த காலத்தில் ஒரு நூல் எழுதுவது என்றால் எளிதான காரியமன்று. ஆயினும் "இறைவன் திருவருளை நம்பி 5—4—1969 தேதியில் திருவிசைப்பா ஒளிநெறியும் கட்டுரையும் எழுதத் துணிந்தேன். ஒருவகையாக அவர் துணையால் எழுதி முடித்தேன்" என்று எழுதியுள்ளார். இப்படித் தளர்ந்த நிலையிலும் அயராது உழைத்த அரிய பெரியவர்க்கு டாக்டர் பட்டம் எந்தப் பல்கலைக் கழகமூலமாவது வாங்கித் தரவேண்டும் என்று நினைத்துத் திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் பெருமுயற்சி செய்து மதுரைப் பல்கலைக் கழகத்தில் தணிகைமணிக்கு டாக்டர் பட்டம் பெற்றுக் கொடுத்தார். அந்தச் சமயத்தில் பிள்ளையவர்கள் குடும்பத்துடன் இருந்து சென்னை இரயில் நிலையம் முதற்கொண்டு மதுரை சென்று திரும்பிவரும்வரை எங்கட்கு அளித்த வரவேற்பும் கண்காணிப்பும், மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் பாராட்டிப் பொன்னாடை போர்த்ததும், மற்றக் கழகங்கள் பொன்னாடை போர்த்திப் பெருமைப்படுத்தியதும் வ. சுப்பையாபிள்ளை அவர்கள் ஏற்பாடுகள் என்பதில் ஐயமில்லை.

இங்கொன்று சொல்ல விரும்புகின்றேன். திரு. சுப்பையா பிள்ளை அவர்களிடம் தனித்திறமை உண்டு. புலவர்களைக் கண்டபோதே அவர்கள் எந்த வழியில் ஆர்வம் உள்ளவர்கள் என்பதை அறிந்து அவர்களை அந்தந்த வழியிலேயே ஊக்குவித்து வேலை வாங்கும் திறமை படைத்தவர். 35 வருடமாகத் திரு. சுப்பையா பிள்ளை அவர்களுடனும் அவர்கள் குடும்பத்தாருடனும் பழகிய அன்பு அழியா அன்பாகும்.

———

**கண் விழிப்பாய் !**

*ஒண்டமிழ்த்தாய் சிலம்படியின்*
*முன்னேற்றம் ஒவ்வொன்றும்*
*உன் முன்னேற்றம்!*
*கண்டறிவாய் எழுந்திரு நீ*
*இளந் தமிழா கண்விழிப்பாய்!*

—புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்

## பல் மருத்துவப் பேராசிரியர் டாக்டர் ஜே. ஜி. கண்ணப்பர் அவர்களுக்கு விருது

ஆண்டுதோறும், சிறப்புப் பணியாற்றும் 15 மருத்துவர் கட்கு வழங்கப்பெறும் டாக்டர் B. C. ராய் விருது, இவ்வாண்டு



இந்திய மருத்துவக் கழகத்தின் பரிந்துரைப்படி, இந்திய, பற் சீரமைப்பு சங்கத் தலைவரும், சென்னைப் பல் மருத்துவப் பேரா சிரியராகப் பணியாற்றி வருபவரும் கழக நூலாசிரியருமான டாக்டர் ஜே. ஜி கண்ணப்பன் M.D.S., F.I. C.D.F.C.I.P. அவர்களுக்கு வழங்கப் பெறுகிறது, என்ற செய்தி அறிந்து பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

சமுதாய மருத்துவ உதவி எனும் பொருள்பற்றி வாய், பல், மருத்துவம் முதலிய நூல்களைத் தமிழில் எழுதியுள்ளமைக்காகவும் பிற மாநிலங்களில் சிறப்புப்பணி ஆற்றியுள்ளமைக்காகவும் திரு கண்ணப்பர் அவர்கட்கு இவ் விருது வழங்கப்படுகிறது. தங்கப் பதக்கமொன்றுடன் ரூ. 5000/- தொகையாகவும் வழங்கப்பெறும்.

டாக்டர் கண்ணப்பர் அவர்கள் நம் சை. சி. நூற்பதிப்புக் கழகவழி 'வாய், பல் மருத்துவம்'; 'பல் பாதுகாப்பு' என்னும் நூல்களை இனிய எளிய தமிழில் எழுதியுள்ளார். இவற்றுள் 'வாய், பல் மருத்துவம்' தமிழக அரசின் பரிசினைப் பெற்றதாகும்.

பேராசிரியர் கண்ணப்பர் அவர்கள், பல் மருத்துவத் துறை யில் 26 ஆண்டுகளாகப் பணியாற்றிவரும் நுண்மாண் நுழைபுல மிக்க மருத்துவப் பேரறிஞராவார். பொதுவாக மருத்துவக் கலையும், சிறப்பாகப் பல் மருத்துவமும் தமிழில் பரவலாக வெளி வந்து மக்கட்குப் பயன்பட வேண்டும் என்னும் பொதுநல நோக்கமுடையவர். நல்ல தமிழ்ப் பற்றுளர்; மறைந்த கழகத் தலைவர் வ.சு. அவர்களிடமும் கழகத்திடமும் பற்றுக்கொண்டவர்.

தமிழக மட்டுமின்றிச் சில வெளி மாநிலங்களிலும் இவர் மருத்துவப் பணி ஆற்றியுள்ளார். பல் மருத்துவ ஆராய்ச்சிக் காக அமெரிக்கா சென்று வந்துள்ளார். முற்போக்குக் கருத்து உடையவராகிய இவர் எல்லாரிடமும் எளிமையாகவும் இனிமை யாகவும் பழகும் பண்பினர். இத்தகைய பெருமகனார் டாக்டர் B. C. ராய் விருதினைப் பெறுவது குறித்துப் பெரிதும் மகிழ்ந்து பாராட்டு கிறோம். வாழ்க டாக்டர் கண்ணப்பர்! வளர்க அவரது புகழ்!

# மொழிஞாயிறு பாவாணரின் வேர்ச் சொல்லாய்வுத் தொடக்கம்

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

(முன்பரல் - ௫, ௪௭உஆம் பக்கத் தொடர்ச்சி)

1924இல் மதுரைத் தமிழ்ச் சங்கப் புலமைத் தேர்வில் பாவாணர் தேர்ந்தார். 1926இல் தென்னிந்திய தமிழ்ச் சங்கப் புலமைத் தேர்வில் தேர்ந்தார்; இவ்வெற்றிகளை எய்தும் காலையிலேயே, சீர்த்த புலமையில் கூர்த்து விளங்கினார். ஆகலின், 1931இலேயே 'மொழிஞாயிறு' இவரென ஒளிகாட்டும் கட்டுரைகள் வெளிப்படத் தொடங்கின.

தமிழர்தம் தவப்பேற்றால், 1920இல் திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்தக் கழகம் தோன்றியது. அக்கழகத்தின் அருந்தமிழ்ச் செல்வியாகச் 'செந்தமிழ்ச் செல்வி' 1923இல் கிளர்ந்தது. அச்செல்வி திங்கள் தோறும் தமிழ் உலகுக்குச், செல்வக் கொள்ளையை வாரி வாரி இறைக்கலானாள்; அவளுக்கு அருவிலை நன்கல அணிமணியாடைகளைப் புனைந்து புனைந்து புலமைச் செல்வர்கள் செவிலியெனச் சீராட்டிப் பாராட்டி வளர்க்கலாயினர். அத்தகையருள், ஐம்பானாண்டுகள் தொடர்பு கொண்டு புலமை யூட்டத்தினால் அரவணைத்துக் காத்த ஆராப் பெருவள்ளல் பாவாணர்! அவர் புலமை யூற்றத்தைக் கொள்கலனாகத் தாங்கிப் புகழுலாப் பொலிந்து திகழ்ந்தவள் அழகுச் செந்தமிழ்ச் செல்வி! செல்வியைச் செவிலியரோடு இணைத்த திருவினர் எவர்? அவர் 'தாமரைத் திருவினர். தமிழ் உலகுக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லா உயர்பணி செய்துவரும் பெரியவர் வ. சு.

29-7-31இல், "செல்விக்கு மட்டும் என் வாணாள் உள்ள வரையும் சிறந்த கட்டுரைகள் ஒழுங்காக அனுப்பிக் கொண்டிருப்பேன்" என்று சூளிட்டு எழுதினார் பாவாணர். அச்சூள் மெய்த்ததோ? பொய்த்ததோ?

1931 முதல் தம் வாணாள் வரை கட்டுரை வரைந்தார். இறுதியாக 'உலகத் தமிழ்க் கருத்தரங்கு மாநாடு' பற்றி 1980 திசம்பர்த் திங்களில் ஒரு கட்டுரை வரைந்தார் (௫௫-௪) உலகத் தமிழ் மாநாட்டையே நினைவுக் குறியாக்கித் தம் புகழ்வாழ்வை 1981 சனவரித் திங்களில் நிலைபெறுத்தினார். 'தனித்தமிழ்ச் சீயம் வீழ்ந்தது' என வெளிப்பட்ட பாவாணர் நினைவு மலரிலும்,

அவர் எழுதிய 'தமிழனின் பிறந்தகம்' கட்டுரை வெளிப்பட்டது. "நிலம் பெயரினும் நின் சொற்பெயரல்" என்னும் இரும்பிடர்த் தலையார் இயம்புதலையும் (புறம். 3), "உறழா மயங்கி உறழினும் என்றும், பிறழா பெரியோர் வாய்ச்சொல்" என்னும் புறப்பொருள் வெண்பாமாலையார் புகற்சியையும் (167) மெய்ப்பித்தவர் பாவாணர்.

செல்வியில் கிளர்ந்த பாவாணர்தம் முதற்கட்டுரை (9: 2 5) மொழியாராய்ச்சி (Comparative Philology) என்பது. அது 1931 சூன்-சூலைத் திங்களிதழில் வெளிப்பட்டது. அடுத்த இதழில், 'வடமொழிச் சென்ற தென் சொற்கள்' வெளிப்பட்டது.

உலகமக்கள் அனைவரும் ஒருதாய் வழியினரே அதுபோல் உலக மொழிகள் அனைத்தும் ஒருதாய் மொழி வழியினவே என்பதை முதற் கட்டுரையிலேயே அருமையாக விளக்கி விடுகிறார் :

"ஒரு மரத்தில், சிறு கிளைகட்கு நேர் இயைபு இன்றேனும் அவற்றைத் தாங்கும் பெருங்கவைகட்கு அடிமரத்துடன் நேர் இயைபிருப்பது போல, உலகமொழித் தொகுதிகட்குள் சிறு பிரிவுகட்கு நேர் இயைபின்றேனும் அவற்றிற்கு மூலமான பெரும் பிரிவுகட்கு நேரியைபு திட்டமாயுள்ளதாம். எல்லாக் கிளைகட்கும் மூலமான ஓர் அடிமர மிருப்பதுபோல எல்லா மொழிகட்கும் மூலமான ஒரு தாய்மொழியுமிருத்தல் வேண்டும். உலகத்திலுள்ள மக்களெல்லாம் ஒரு தாய் வழியினராதலின் அவர் வழங்கும் மொழிகளும் ஒரு தாய் வயிற்று வழியிலாதல் வேண்டும்.

இவ்வாறு உலக முதன் மொழித் தன்மையை விளக்கும் பாவாணர், அம்மொழி தமிழே என்றும், எல்லா மொழிகட்குமுள்ள பெரும்பாற் சொற்களைப் பகுதிப் பொருள்களுடன் இயற்கை வடிவில் வழங்குவது தமிழே என்றும் தெரிவிக்கிறார். அன்றியும், ஆங்கிலம், இரேக்கம், இலத்தீனம் என்னும் மும்மொழிகளிலும் சென்று வழங்கும் நம்மொழிச் சொற்கள் ஆயிரக்கணக்கின என்பதை ஐந்நூற்றுக்கு மேற்பட்டவற்றால் வெள்ளிடைமலைபோல் தெள்ளிதில் காட்டுதும் என்று கூறி, 598 சொற்களை அவற்றின் பொருள் விளக்கத்துடன் காட்டுகிறார். இம் முதற் கட்டுரையே மொழி ஞாயிற்றின் ஒளிச்சுடர் கிளர்ந்தெழுதலை உணர்த்த வல்லதாய் அமைந்துள்ளது.

பாவாணர் வரைந்த அடுத்த கட்டுரை 'வடமொழிச் சென்ற தென் சொற்கள்' என்பது (9 : 295). அதில் ஆரிய மொழி செருமானிய மொழிக்கு இனமென்பதை முதற்கண் நிறுவிப்

பின்னர் ஆரியர் இந்திய நாட்டுக்கு வருமுன்னரே கொண்டிருந்த தமிழ்மூலச் சொற்களைக்காட்டி இறுதிப் பகுதியில் ஆரியர் இந்திய நாடு வந்த பின்னர்ச் சென்ற தென்சொற்கள் இவையெனக் குறிப்பிடுகின்றார். சின்னூறு சொற்களை யெடுத்துக் காட்டிய பாவாணர், "இவ்வாறு எத்தனையோ தென்சொற்கள் வடமொழிச் சென்று வாகுகராய் வழங்குகின்றன. அவை நளராங் காலமும் நண்ணும்" என்கிறார்.

கலியால் உருமாறிய நிடத நாட்டு வேந்தன் பெயர் 'வாகுகன்' என்பதும், அவன் கலிநீங்கிய காலத்து மீண்டும் பெற்ற பெயர் நளனென்பதும் நளன் கதைச் செய்தி. தென்சொல் உருமாறி வடசொல்லாய்க் காட்சி வழங்கினும் மொழியாராய்ச்சி வல்லாரால் துலக்கப் பெறுங்கால் தமிழ்ச் சொல்லாதல் தெளிவாம் என்பதை உவமையால் சுட்டினார். "தமிழ் தவிர ஒருமொழியாவது பிறமொழியின் கலப்பின்றித் தானாய் வந்ததன்று" என்று முடித்தார்.

வட்டார மொழி தமிழே என்றும், கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் தமிழைக் கற்பிப்பது வடமொழிக்கு இழிவாம் என்றும், கல்லூரிக்குள் கால் வைத்தற்கும் கன்னித்தமிழுக்கு இடந்தருதல் ஆகாது என்றும் வரிந்து கட்டிக்கொண்டு வல்லாண்மையால் வன்கேட்டில் தமிழ்ப் படிப்பாளிகளுள் சிலரும், வடமொழி வருடிகளும், தமிழ் வெறுப்பர்களும், ஆங்கில அடிமையரும் கிளர்ந்தும் வெறித்தும் வீறுகொண்டும் நின்ற காலையில், அஞ்சா அடலேருகத் தமிழ் உலக முதன்மொழியாதலை அறிவுப் புலத்தால் நிறுவிக் காட்டினார் பாவாணர் என்றால், 'தமிழர் புகழெல்லாம் தம்புகழாக்கிக் கொண்டவர்' அவரே யல்லரோ ?

தம் திறமான ஆய்வுவழி, வெளிப்பட்ட கட்டுரைகளை வெளியிடுவதில் என்ன வீறு கொள்கிறார் பாவாணர் :

> "கட்டுரையில் ஒரு சிறிதும் விடவேண்டா. ஒவ்வொரு பகுதியும் ஆராய்ச்சி முடிவென்பது ஒருமுறை வாசித்தால் தெரியவரும்" 18-8-31 கடிதம்.

> "நான் அனுப்புவதில் ஒரு சிறிதும் விடவேண்டா. ஏதேனும் பிறர்க்கு உடன்பாடன்றாயினும் அவர் கூறும் தடைகட்கெல்லாம் தகுந்த விடைகூறச் சித்தமாயிருக்கிறேன்" 29-9-31 கடிதம்.

> "என் கட்டுரைக்கு எவரேனும் மறுப்பெழுதினால் விடையளிக்கத் தயாராயிருக்கிறேன்" 12-10-31 கடிதம்.

இக் கடிதங்கள் கழக ஆட்சியர்க்கு எழுதப் பெற்றவை.

பாவாணர் புலமைத் திறத்தைத் திரு. வ. சு. அறிந்தார். அப் புலமையை நாடு அறிந்த புலமையாய், நானிலம் அறியும் புலமையாய் ஆக்கல் கடன் எனத் தெளிந்தார். கட்டுரையைச் செல்வியின் அணிகலமாகவும் நூல்களைக் கழக அணிகலமாக்வும் செய்வித்தார். கட்டுரைகளாக முதற்கண் வெளிப்பட்டவற்றை நூலுருச் செய்தும் பரப்பினார். வினையால் வினையாக்கி விழுப்புகழ் பெருக்கினார்.

பாவாணர்தம் சொல்லாய்வுத் தேர்ச்சியை உன்னிப்பாகக் கண்ட வ. சு. வேர்ச்சொற் கட்டுரைகளைத் தொகுத்து நூலாக்க விழைந்தார். பக்கத்திற்கு நான்கு சொற்களும் அவற்றின் விளக்கமும் அமையும் வகையில் ஓர் ஒழுங்குறுத்தி வெளிப்படுத்தத் திட்டமிட்டார். ஒரு வெள்ளோட்டமாக அல்லது முன்னோட்டமாக அஃதமையுமெனத் தெளிந்தார். உயர்ந்த ஆக்கப் பொருள்களுக்கெல்லாம் ஒப்பிகைப் பொருள் (Sample) காட்டுதல் வாணிக முறையல்லவோ ? வாணிகப் பொது நியதி, அறிவு நூல் வாணிகத்திற்கு மட்டும் அடுக்காமல போகுமா ?

———

## எப்பாவலரும் ஏத்திடும் வித்தகர்

[பண்டித வித்துவான் சாம்பசிவனார்]

உருவத்தால் சிறியர் ஆனார்;
　　உள்ளத்தாற் பெரியர் ஆனார்;
மருமத்தால் அரிய செய்தார்!
　　மற்றவர்க்கும் உரிய செய்தார்!
கருமமது கண்ணாய்க் கொண்டார்!
　　கழகத்தைக் காத்து நின்றார்!
கருக்கொள்ளும் காலத் தன்றே
　　கனிதமிழின் நினைவே கொண்டார்!

வேறு

நல்லமைச்சர் எண்ணுமாறு நல்லாட்சி செய்திட்ட
தெள்ளுதமிழ்க் காவலர்யார் தேர்வாயோ — நல்லாய்கேள்
எப்பாவில் வலலவரும் ஏத்திடுநல் வித்தகராம்
சுப்பையா பிள்ளையெனச் செப்பு.

# சங்க நூல்களில் நெல்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எசு., புதுவை.]

பெரும்பாணாற்றுப்படையில் ஒருவகை நெல் கூறப்பட்டுள்ளது.

"நீங்கா யாணர் வாங்குகதிர்க் கழனிக்
கடுப்புடைப் பறவைச் சாதி யன்ன
பைதற விளைந்த பெருஞ்செந் நெல்லின்"

பெரும்பாணாற்றுப்படை - 228-230.

இவ் வரிகளுக்கு நச்சினார்க்கினியர் 'எறியப்பட்டார்க்குக் கடுக்குந் தன்மையைக் கொடுத்தலையுடைய குளவித் திரளை யொத்த பசுமையறும்படி முற்றி, பெரிய செந்நெல்லினுடைய' என்று உரை கூறியதைக் கவனிக்க வேண்டும். 'எறியப்பட்டார்' என்பது குளவியால் கொட்டப்பட்டார் என்று பொருள்தரும். குளவி இனத்தில் சிலவகை தனித்து வாழும். ஆனால் குளவி இனத்தில் தேனீ போலக் கூடுகட்டி வாழும் வகையும் உண்டு. "பறவைச் சாதியான கூடுகட்டி வாழும் குளவிகள் போலப் பசுமை நீங்கி முற்றிய கதிருடைய பெருஞ்செந்நெல் இருந்தது" என்று பெரும்பாணாற்றுப்படையின் வரிகளுக்கு உரை கூறப்பட்டுள்ளது. பதிற்றுப்பத்திலும் இதே உவமை பயிலுகின்றது.

"பரூஉப்பக டுதிர்த்த மென்செந் நெல்லின்
அம்பண வளவை யுறைகுவித் தாங்குக்
கடுந்தே றுறுகிளை மொசிந்தன துஞ்சும்"

— பதிற்றுப்பத்து 8-(71) வரிகள் 4-6

செந்நெல் என்பது ஒருவகைச்சாதி என்று பொருள் கூறப்பட்டுள்ளது. பண்டாரகர் உ. வே. சாமிநாதய்யர் அடிக்குறிப்பில், "வெண்ணெல்லும் உண்டாதலின் செந்நெல்லெனும் சாதி" என்று கூறியிருப்பதைக் காணலாம். ஆதலால் நிறத்தின் அடிப்படையில் நெல்லை செந்நெல், வெண்ணெல் என்று இருவகைச் சாதிகளாகப் பிரித்தனர் என்பது தெரிகின்றது. செந்நெல் என்பது இன்று சம்பா என்கிற பெயரில் வழங்குகின்றது. வெண்ணெல் என்ற பெயர் ஒருவகை நெல்லுக்கு வழங்கியதை அபிதான சிந்தாமணியும் குறிப்பிட்டுள்ளது.

பெரும்பாணாற்றுப்படையில் பிறிதொரு நெல்வகை கூறப்பட்டுள்ளது.

"வளைக்கை மகடூஉ வயினறிந் தட்ட
சுடர்க்கடைப் பறவைப் பெயர்ப்படு வத்தம்"
— பெரும்பாணாற்றுப்படை-304-305 வரிகள்.

"ஞாயிறு பட்ட காலத்தே பறவையினது பெயரைப் பெறு நெல்லு என்றது, இராசான்னமென்னும் பெயர் பெறுகின்ற நெல் லென்றவாறு. ஆகுதி பண்ணுதற்கு இந்த நெல்லுச் சோறே சிறந்ததென்று இதனைக் கூறினர். இதனை மின்மினி நெல் லென்பாரும் உளர். இப்பெயர் வழக்கின்மையும் ஆகுதிக்குச் சிறவாமையு முணர்க" என்று நச்சினார்க்கினியர் விரிவான விளக்கம் கூறியுள்ளார். சுடர்க்கடை என்பதற்கு நச்சினார்க் கினியர் ஞாயிறுபட்ட காலத்தே என்று பொருள் கூறியது வலிந்து கூறியதாகும். ஞாயிறு பட்ட காலத்தே பறவையினது பெயரைப்பெறு நெல் என்று கூறியது பொருத்தமற்றது. ஆனால் ஞாயிறுபட்ட காலத்தில் தான் மினமினியின் உடலின் கடைப்பகுதி யில் உள்ள சுடர்தெரிகின்றது. பூச்சிகளில் சூடு இல்லாமல் (Heat) சுடர் தரும் ஒளி (cold light) மின்மினிக்கு மட்டுமே உண்டு. ஞாயிறு படுதற்கும் அதனால் பறவையின் பெயர் பெறுதற்கும் ஒரு தொடர்புமில்லை. சுடர்க்கடை என்பது மின்மினியின் உடலில், கடையில் இருக்கும் சுடர் அஃதாவது ஒளியைக் குறித் தது. சுடரைக் கடையில் உள்ளது மின்மினிப் பூச்சியே ஆகும். சுடர்க்கடை பறவைப் பெயர், மின்மினி நெல்லைக் குறித்தது, இயற்கைக்குப் பொருத்தமான பொருளாகும். பறவை என்ற சொல் சங்ககாலத்தில் பறக்கும் எல்லா உயிர்க்கும் வழங்கிய பெயராகும். பூச்சிகளும் இதில் அடங்கும். மினமினி நெல் ஆகுதிக்குச் சிறப்பாகாமல் இருக்கலாம். ஆனால் பெரும்பா ணாற்றுப்படையில் கூறப்படும் நெல் பார்ப்பனி அடும் பாற் சோறு, பருப்புச்சோறு ஆகியவற்றுக்குப் பயன்படும் நெல்லாத லால் இது ஆகுதி பண்ணுதற்கு ஏற்றதன்று என்று நச்சினார்க் கினியர் கூறியது பொருததமற்றது. ஆகுதிக்கு ஏற்ற நெல் பதிற்றுப்பத்தில் ஏழாம் பத்தின் பதிகத்தில் கூறப்பட்டுள்ள 'ஒத்திர நெல்'லே யாகும். அக்கினி ஒத்திரத்திற்குரிய (Agni Hotra) நெல் நீவாரம் (NEEVARA) எனப்படும் நெல் லாகும். இந்தக் காட்டு நெல்தான் (wild rice) வேதத்தில் ஆகுதிக்குரியதாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த நெல் வகையிலிருந்தே (wild rice) பண்பட்ட நெல்வகைகள் பின்னர் தோன்றின. இந்த நெல் தானாக விளையும் வகையைச் சேர்ந் தது. தானாக நெல் மணிகளை உதிர்க்கும். அன்னம் என்ற பெயர் இக்காலத்திலும் ஒருவகை நெல்லுக்குப் பெயராக வழங்கு கின்றது. அதில் சிறந்ததொரு நெல்வகையையே இராசான்னம்

என்று அழைத்திருக்கலாம். அன்னமழகிச் சம்பா என்ற பெயர் இன்றும் வழங்கி வருகின்றது. ஆதலின் மின்மினி நெல் என்று பொருள் கொண்டதே பொருத்தமாகும். 'மின்மினி நெல லென்பாருமுளர்' என்று நச்சினார்க்கினியர் கூறியதால் நச்சினார்க்கினியருக்கு முந்தி ஒருவர் பத்துப்பாட்டுக்கு உரை எழுதி இருக்கலாம் என்பது தெரிகின்றது. மின்மினி என்ற பெயர் கருடஞ் சம்பா, காடைச் சம்பா என்று தற்காலத்தில் வழங்குவது போல் பயிலப்பட்ட பெயராக இருக்கலாம்.

பொருநராற்றுப்படையில் சாலி என்றொரு நெல் குறிப்பிடப் பட்டுள்ளது.

> "குன்றெனக் குவைஇய குன்றுக் குப்பை
> கடுந்தெற்று மூடையி னிடங்கெடக் கிடக்கும்
> சாலி நெல்லின் சிறைகொள் வேலி"
>
> — பொருநராற்றுப்படை - 244 - 246

சாலிநெல் என்பதற்குச் செந்நெல் என்று உரை கூறப்பட்டுள்ளது. ஆனால் சாலி என்பது ஓர் உயர்ந்த சாதி நெல்லாகும். சீன யாத்திரிகரான யுவான் சுவாங் (Yuan Chwang) இந்த நெல்லின் சிறப்பையும், பௌத்தர்களின் பள்ளிகளில் உணவுக்காக இந்நெல் பயன்படுத்தப்பட்டதையும் குறிப்பிட்டுள்ளார்.

பத்துப்பாட்டிலிருந்தும், பதிற்றுப்பத்திலிருந்தும் செந்நெல், மின்மினி, ஒத்திரநெல் (நீவாரம்), சாலி நெல் என்கிற நெல் வகைகள் தெளிவாகின்றன. உரையிலிருந்து இராசான்னம், வெண்ணெல் ஆகிய இரு நெல்வகைகள் தெரிகின்றன.

— - —

# கோச்செங்கணன் யார்?

[ டாக்டர் இரா. கலைக்கோவன், M.B.B.S.. D.O. ]

(பரல் ௫, கஅசு ஆம் பக்கத் தொடர்ச்சி)

சிலர் 'எண்டோள் ஈசன்' என்பதால், அது சிவபெருமானைத் தான் குறிக்கிறது என்பார்கள்.

"கணம்புல்கு குலத்தார் நீல கண்டர்
எண்டோளர் எண்ணிறந்த குணத்தி னாலே
கணம்புல்லன் கருத்துகந்தார்"[44]

என்ற வரிகளையும்,

"எண்டோள் வீசிநின் றாடும்பி ரான்தன்னைக்
கண்காள் காண்மின்களோ"[45]

என்ற வரிகளையும் அதற்கு மேற்கோளாய்க் காட்டுவார்கள். அப்பர் பெருமான் சிவபெருமானை எண்டோள் ஈசனாக விளித்து வழிபட்டிருப்பது போலவே, திருமங்கையாழ்வார் கோச்செங் கணனைப் பாடும் அதே மூன்றும் திருநறையூர்ப் பதிகத்தில்,

"பவ்வநீர் உடைஆடை யாகச் சுற்றிப்
பாரகலம் திருவடியாய்ப் பவனம் மெய்யா
செவ்விமா திரமெட்டும் தோளா அண்டம்
திருமுடியா நின்றான்பால் செல்ல கிற்பீர்"[46]

என்று திருமாலைத் திசையெட்டும் தோளாய்க் கொண்ட எண் தோள் ஈசனாகக் குறிப்பிடுகிறார். அப்பர் அடிகள் சிவபெருமானை எண்தோள் ஈசனாகப் பாடியிருக்கலாம். ஆனால் கோச்செங்கணான் எண்தோள் ஈசற்குக் கோயில்கள் எழுபது செய்தமை குறித்துப் பாடியது திருமங்கையாழ்வார்தாமே தவிர, அப்பர் அடிகள் அல்லரே! அதனால் திருமங்கையாழ்வார் எண்தோள் ஈசனாக யாரைக் கருதினார் என்பதே இங்கு நினைக்கத் தகுந்தது. வேறு ஏதேனும் பதிகத்தில் எண்தோள் ஈசனாகத் திருமாலைக் குறித்திருந் தாலும் பரவாயில்லை. அதே பதிகத்தில் மூன்றும் பாடலில் திசை யெட்டும் தோளாய்க் கொண்டவன் திருமாலே என்று கூறுகிறார்.

---

44. ஆறாம் திருமுறை — திருநாவுக்கரசர், தருமபுர ஆதீனப் பதிப்பு, பக். 95, செய்யுள் எண். 7
45. நான்காம் திருமுறை — திருநாவுக்கரசர், ,, பக். 78, செய்யுள் எண். 83.
46. பெரிய திருமொழி — திருநறையூர்ப் பதிகம், பக். 144, செய்யுள் எண். 3.

அத்திருமாலே ஈசன் எந்தை என்று இரண்டாம் பாடலில் குறிப்பிடப்படுகிறர். இவ்விரண்டு சான்றுகளையும் நோக்கும்போது கோச்செங்கணுன் எழுபது மாடக்கோயில்கள் எழுப்பியது திருமாலுக்கே என்ருகும்.

இதையே பல்லவர் சரித்திரம் என்னும் நூலில், 'இருக்கு வேதத்தைக் கூறும் திருமாலுக்கு எழுபது ஆலயங்கள் செய்துள்ள சோழர் குலத்துச் செங்கணுன் செய்த திரு நறையூர்க் கோயிலைச் சேருங்கள்' என்று திருநறையூர்ப் பதிகத்தின் எட்டாம் பாடலின் இறுதி வரிகளுக்குப் பொருள் விளக்கம் தருகிறர் வரலாற்றுப் பேராசிரியர் பி. தி. சீனிவாச அய்யங்கார் அவர்கள்.[47]

'எண்தோள் ஈசன்' என்று திருமங்கை மன்னன் குறிப்பிடுவது சிவபெருமானையல்ல என்பதற்கு மேலும் சில சான்றுகள் காட்டலாம். முதலாழ்வார்கள் மூவர் காலத்தும் இருந்தது போல் திருமங்கையாழ்வார் காலத்தில் சைவத்தைப் போற்றும் மனப்பாங்கு வைணவர்களிடத்து இல்லை. மாருகச் சைவக் கடவுளான சிவபெருமானை இழித்தும் பழித்தும் கூறுவதே இயல்பாய் இருந்து வந்தது. இதை,

"வள்ளி கொழுநன் முதலாய
 மக்க ளொடு முக்கண்ணன்
வெள்கி ஓட"[48]

என்ற வரிகளாலும்,

"ஆறும் பிறையும் அரவமும்
 அடம்பும் சடைமேல் அணிந்து உடலம்
நீறும் பூசி ஏறும் ஊரும்
 இறையோன் சென்று குறையிரப்ப"[49]

என்ற வரிகளாலும் நன்கு உணரலாம்.

திருமாலே அனைத்துக் கடவுளரிலும் பெரியவர் என்பதை,

"நிறைபார வான்மூடும் நீள்செல்வத் திருநறையூர்
பிறையாடும் சடையானும் பிரமனுமுன் தொழுதேத்த
இறையாகி நின்ருன்தன் இணையடியே அடைநெஞ்சே"[50]

என்ற வரிகளாலும்,

---

47. பல்லவர் சரித்திரம்—பி. தி. சீனிவாச அய்யங்கார், பக். 114.
48. பெரிய திருமொழி, திருவேங்கடத்தான் திருமன்றப் பதிப்பு, பக். 148, செய்யுள் எண். 6.
49. பெரிய திருமொழி, திருநறையூர்-4, பக். 149, செய்யுள் எண். 9.
50. பெரிய திருமொழி, திருநறையூர்ப் பதிகம்-6, பக். 153, செய்யுள் எண். 9.

"மூவரில் முன் முதல்வன்"[51]

"முனிவனை மூவுலகும் படைத்தமுதல் மூர்த்திதன்னை"[52]

என்ற வரிகளாலும் திருமங்கையாழ்வாரே உணர்த்துதலைக் காணலாம். இவ்வாறு திருமாலை உயர்த்தியும் சிவபெருமானைப் பழித்தும் இழித்தும் கூறும் திருமங்கையாழ்வார் தம் பாடலில், 'இருக்கிலங்கு திருமொழிவாய் எண்தோள் ஈசற்கு' என்று சிவ பெருமானைக் குறிப்பாரா?

'எண்தோள் ஈசன்' என்ற பெயரால் திருமாலைத் திருமங்கை மன்னன் பாடியிருப்பது போலவே 'கூத்தன்' என்றும், 'பரமன்' என்றும் கூட திருமாலை விளித்துப் பாடியிருக்கிறுர்.

"பரிமுகமாய் அருளியஎம் பரமன் காண்மின்"[53]

"பன்றியாய் மீனுகி அரியாய்ப் பாரைப்
படைத்துக் காத்(து) உண்டுமிழ்ந்த பரமன் தன்னை"[54]

"பாலகனுய் ஆலிலையில் பள்ளி கொள்ளும் பரமன் இடம்"[55]

"பறவைமுன் உயர்த்துப் பாற்கடல் துயின்ற
பரமனுர் பள்ளி கொள் கோயில்"[56]

"குறிய மாணி உருவாய
கூத்தன் மன்னி அமரும் இடம்"[57]

"கொம்பதனைப் பறித்தெறிந்த கூத்தன் அமர்ந்துறையும்
இடம்"[58]

என்னும் வரிகள் இதற்குச் சான்றுகளாம். இவற்றையெல்லாம் நோக்கும்போது கோச்செங்கணுன் எழுப்பிய எழுபது மாடக்

---

51. பெரிய திருமொழி, திருமாலிருஞ்சோலை-2, பக். 227, செய்யுள் எண். 1.
52. பெரிய திருமொழி, திருமாலிருஞ்சோலை-2, பக். 227, செய்யுள் எண். 2.
53. பெரிய திருமொழி, திருவழுந்தூர், 4, பக்.174, செய்யுள் எண். 2.
54. பெரிய திருமொழி, திருவழுந்தூர்-4, பக். 176, செய்யுள் எண். 10.
55. பெரிய திருமொழி, திருத்தேவனுர் தொகை, பக். 81, செய்யுள் எண். 6.
56. பெரிய திருமொழி, திருவெள்ளியங்குடி, பக். 105, செய்யுள் எண். 4.
57. பெரிய திருமொழி, திருப்புள்ளம் பூதங்குடி, பக். 107, செய்யுள் எண். 1
58. பெரிய திருமொழி, திருத்தேவனுர் தொகை, பக். 81, செய்யுள் எண், 9.

கோயில்களும் திருமாலுக்கே என்றுதான் திருமங்கையாழ்வார் சொல்வதாகக் கொள்ள நேரிடும்.

அப்பர், சம்பந்தர், சுந்தரர் மூவரும் கோச்செங்கணன் கட்டிய சிவன் கோயில்களைப் பாடியுள்ளமை இங்கு எண்ணத் தக்கது. அப்பர் அடிகள் தம்முடைய அடைவுத் திருத்தாண்டகத்தில்,

"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோ(டு) எட்டும் மற்றும்"[59]

என்று குறித்திருப்பது, சிவபெருமானுக்கான பெருங்கோயில்கள் அவர் காலத்தில் எழுபத்தெட்டு இருந்தமையைப் புலப்படுத்துகின்றன. அப்பர் அடிகள் இந்த எழுபத்தெட்டு கோயில்களையும் எழுப்பியது யாரென்று குறிக்கவில்லை. பெருங்கோயில் என்று அப்பர் அடிகள் குறிப்பதும், மாடக்கோயில் என்று திருமங்கையாழ்வார் குறிப்பதும் ஒன்றே என்பது கலை வரலாற்று அறிஞர்கள் ஒப்புக்கொள்ளும் செய்தியாகும். கோச்செங்கணன் எழுப்பியதாகச் சில மாடக்கோயில்களைச் சம்பந்தரும் சுந்தரரும் தங்கள் தேவாரப்பதிகங்களில் குறிப்பிடுகின்றனர்கள்.

"வம்பியல் சோலைசூழ் வைகல் மேற்றிசைச்
செம்பியன் கோச்செங்க ணான்செய் கோயிலே"[60]

"மடவனம் நடைபயில் வைகல் மாநகர்க்
குடதிசை நிலவிய மாடக் கோயிலே"[61]

என்று சம்பந்தர் பெருமான் திருவைகன் மாடக்கோயில் இறைவனைப் பாடும்போது, கோச்செங்கணனே அக்கோயிலை எழுப்பியதாகக் கூறுகிறார்.

"ஐயநன் பொருபுனல் அம்பர்ச் செம்பியர்
செய்யகண் இறைசெய்த கோயில் சேர்வரே"[62]

"அரிசிலம் பொருபுனல் அம்பர் மாநகர்க்
குரிசில்செங் கண்ணவன் கோயில் சேர்வரே"[63]

என்ற சம்பந்தரின் வரிகளால், திரு அம்பர்ப் பெருந்திருக்கோயிலைக் கட்டியவன் சோழன் கோச்செங்கணனே என்பது பெறப்படுகின்றது.

(தொடரும்)

59. ஆறும் திருமுறை, அடைவுத் திருத்தாண்டகம், பக். 521.
60, 61. மூன்றும் திருமுறை — தருமபுர ஆதீன வெளியீடு, திருவைகன் மாடக்கோயில், பக். 84.
62, 63. மூன்றும் திருமுறை — ,, திரு அம்பர்ப் பெருந்திருக்கோயில், பக். 87.

# இலக்கிய விருந்து!

[தி. நா. அறிவுஒளி, க. மு., கல். பி.,]

(பரல்-௫, ௧௧௮ஆம் பக்கத் தொடர்ச்சி)

இலக்கியத்தில் ஆழ்ந்த அடிகளார் இலக்கியக் கருத்துக்களைத் தம் கருத்தாக்கி அழகுநடையாக்கும் ஆற்றல் கருதற்பாலதாகும்.

"தனக்குச் சொந்தமல்லாத ஒரு வேற்றிடத்தில் தனக்கு ஆகாதவர்கூட இருக்கும்படி நேர்வதைப்போல் துன்பமாவது பிறிதில்லை" என்னுங் கருத்து, (ப : 140)

"இன்னாது இனன்இல்லூர் வாழ்தல் அதனினும்
இன்னாது இனியார்ப் பிரிவு" (1158)

"உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போ டுடனுறைந் தற்று" (890)

"துன்பத்திற்கு யாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சம் துணையல் வழி" (1299)

"தஞ்சம் தமரல்லர் ஏதிலார் தாமுடைய
நெஞ்சம் தமரல் வழி" (1300)

என்னுந் திருக்குறளமிழ்தங்களின் பிழிவாகும்.

"நமது உடம்பு ஓர் இயந்திரம் போல்வதாய் இருத்தலின், இதன் உறுப்புகள் ஒவ்வொன்றும் பெரும்பாலும் அசைந்து கொண்டிருத்தல் வேண்டும்; அசையாத இயந்திரத்தின் உறுப்புகள் துருவேறிப் பழுதாய்ப் போவதுபோலப் பல வேலைகளிலும் வருந்தி உழையாத ஒருவர் உடம்பின் உறுப்புகளும் இரத்த ஓட்டங் குறைந்து நரம்பு வலிவற்றுப் பழுதாய்ப் போகின்றன." (ப : 145)

இத்தகு வாழ்வியல் கருத்துகளை மிக எளிய இனிய நடையில் அருமையாய் அமைத்துள்ளார் அடிகள்.

இடத்திற்கும் சூழ்நிலைக்கும் கதை மாந்தர்க்கும் ஏற்ற மொழிநடையை வெற்றியுடன் ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### திருக்குறள் செந்தமிழ் வேதம்

மறைமலையடிகளாரின் வாழ்வு நோக்கத்திற்குரிய பெருந்தகு நூல் திருக்குறளே. அதைப்பற்றி,

"எல்லாரையுங் கரையேற்றும் இத் திருக்குறள் என்னுஞ் செந்தமிழ் வேதத்திற்கு நிகராவது எந்த மொழியிலும் எந்த நாட்டிலும் இல்லை."

(ப : 159)

ஒல்லும் வாயெல்லாம் உயர் திருக்குறளைப் போற்றும் உள்ளம் அடிகளார் உள்ளம் என்பதை உணர்கின்றோம்.

திறனாய்வுக் கூறு

கோகிலாம்பாள் கடிதங்கள் ஒரு புதினக்கதை நூலே யாயினும், அரிய திறனாய்வு நூல் என்பதே உண்மையாகும்.

வாழ்க்கைத் திறனாய்வைப் பேராண்மையுடன் இக்கதையில் ஆற்றிய அடிகள் ஆற்றலை எண்ணுங்கால், தமிழகத்திலுள்ள வேறெந்த எழுத்தாளர்களும் இவர்க்கீடு ஆகார் என்பது திண்ணமாகும்.

குமுகாய ஆய்வாக இப்புதினம் அமைந்துள்ளதால், தமிழினர் கட்டாயம் ஓதியுணரத்தக்கது.

இராமகதைபற்றிய அருந்திறனாய்வு

இராமனைக் கடவுளாகக் கருதியோர் சிலர். கம்பர் அக்கருத்துக்குப் பரவிய வடிவம் படைத்தார்.

'இராமன் பேராற்றல் வாய்ந்தவன் என நூல் முழுதும் கம்பர் முழக்குவார். அடிகளார் இக்கருத்தை நன்காய்ந்து அருமையான திறனாய்வுத் தீர்ப்பருளியுள்ளார்.'

"கைலாசத்தைப் பெயர்த்தெடுத்த அந்த இராவணனைச் சிவபிரான் தமது காற்பெருவிரலால் அம்மலையோடு சேர்த்து அழுத்தி, அதன்கீழ் அவனை நெரித்திருக்க, அவனோடு பலநாள் எதிர்நின்று போர்புரிந்து வருந்தி, கடைசியில் அப்பெருமான் அருளால் அவனை மடித்த விட்டுணுவின் அவதாரமான இராமனது வெற்றியைச் சிறந்ததாகக் கூறி அதனால் அவனே கடவுள் என்று சொல்லுவது எப்படிப் பொருந்தும் ?"

(ப : 164)

புதுமை வேட்கையருக்கு மறைமலையடிகள் பலாப்பழமனைய பண்பட்ட ஆராய்ச்சி விருந்தையளித்துள்ளார் எனின் மிகையன்று.

கம்பனின் கல்விப் பெருமையை விஞ்சும் கல்விப் பெருமிதம் இத்திறனாய்வில் பொலிகிறது.

**முன்னேற்ற உணர்வு**

மக்கள் வாழ்வு நாடோறும் முன்னேற்றம் அடைய வேண்டும். முன்னேறும் வாழ்வே உண்மை வாழ்வாகும்.

அடிகளாரின் குறிக்கோளும் அத்தகையதே. வாழ்வில் நன்மையும் தீமையும் தொடிதோறும் போரிடுகின்றன.

தீமையழியவும் நன்மை ஓங்கவும் பணிசெய்வதே வாழ்க்கை முன்னேறுவதற்கு அறிகுறியாகும்.

அடிகளார், "தீமையின் வலிவைக் குறைக்கும் வழிவகைகள் நாளுக்குநாள் பெருகி வருகின்றன" என எழுதியுள்ளார்.
(ப : 197)

வாழ்வியக்கத்தில் நம்பிக்கையுள்ள மனப்பான்மையை இந் நோக்கு உணர்த்துகிறது.

பெண்மக்களுக்குத் தம் மனம் உவந்த மாட்சியுடைய காதலரினுஞ் சிறந்த தெய்வம் இல்லை. அவர் வழிநின்று தமது கற்பொழுக்கத்தைக் காத்தலே அம்மகளிர்க்குச் சிறந்த கடமை." (ப : 301) என்னுங் கருத்து.

"வினையே ஆடவர்க் குயிரே
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்"

என்னுங் குறுந்தொகைக் கருத்தின் அடிப்படையில் மலர்ந்ததாகும்.

"தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"		(திருக்குறள்)

என்னுங் கருத்தும் இழையோடுகிறது.

காதலும் கற்பும் உலக வாழ்க்கையில் நனிசீரியன என உணர்த்தும் வாழ்க்கை இலக்கியமே கோகிலாம்பாள் கடிதங்கள்.

சாதிவெறி எவ்வாறு ஒழுக்கத்தை, நெறியை யழித்தொழிக்கும் என்பதைப் படம்பிடித்துக் காட்டும் கதை இது.

இப் புதினத்தில் மறைதிறவு (கதைமுடிப்பு மறைத்துவைத்து விடுவித்தல்) மிக அருமையாக ஆளப்பட்டுள்ளது.

அவாம் நிலையாகக் கதை நுட்பத்தைக் காத்து இறுதியில் புலப்படுத்தும் ஆர்வந்தூண்டும் கதையாக (Suspense fiction) அமைந்திருப்பதோடு பிற்பகுதி துப்பறியுங்கதை (detective story)யாகவும் அமைந்துள்ளது.

கற்போர் மனவெழுச்சியையும் ஆவலையும் தூண்டுவதோடு தெய்வமாக் கதை (Fairy-tale) போன்றும் அமைகிறது.

அறவுரைக் கதையாக (Parable story) செந்நெறிக் கதையாக (Detective story) இன்னும் பல இலக்கியப் பண்புகள் வாய்ந்த நுட்பம் ஆய்ந்தாய்ந்து அறிதற்குரியதாம்.

கருத்து வளமும் கதைநலமும் கனிந்த இக்கதை இலக்கிய வரலாற்றில் கலங்கரை விளக்கமாகும்.

தமிழ்ப்புதின இலக்கிய உலகில் ஈடிணையற்ற கலைநுட்பஞ் சான்ற கோகிலாம்பாள் கடிதங்கள் ஓர் எல்லைக்கல்லாம்.



சிவத்திரு. ஏ. டி. ஏ. ஈசுவர் அவர்களின்

## திருவிளையாடற்புராணச் சொற்பொழிவுப் பாராட்டல்

பல்லாவரம் மறைமலையடிகள் கலைமன்றத்தில் சிவத்திரு. ஏ. டி. ஏ. ஈசுவர் அவர்கள் ஞாயிறுதோறும் மாலை 5 மணி முதல் 6-30 வரை நிகழ்த்திவரும் திருவிளையாடற்புராணச் சொற்பொழிவைக் கேட்டு மகிழ விரும்பி 13-2-1983 ஞாயிறு அன்று அதனைக் கேட்கப் பல்லாவரஞ் சென்றேன்.

''உலவாக்கோட்டை'' என்னும் திருவிளையாடற் புராணத்தில் உள்ள படலச் சொற்பொழிவைக் கேட்டு மகிழ்ந்தேன். இடையரு மாரிபோல் தங்குதடை இல்லாமல் அவர்களாற்றிய அப் பேச்சினை யான் பாராட்டிப் பேசும் வாய்ப்பைப் பெற்றபோது ''தக்கோர் குணங்கொடையால்'' என்பதனை யான் ஈசுவர்பால் கண்டுவருகின்றேன். சொற்பொழிவுக் கொடையோடு அவர்கள் தம் நிலைக்கேற்பப் பல நற்பணிகளுக்குப் பொருட்கொடையும் மனமுவந்து வழங்கி வருகின்றார்கள்.

''தாம் இன்புறுவது'' உலகமும் பெறவேண்டுமென்னும் பேரார்வத்தால் சிவநெறிக்குஞ் செந்தமிழ்க்கும் ஆர்வமுடன் பயன் கருதாது உரையாற்றி வருகின்றார்கள் என்று கூறி மகிழ்ந்தேன். உயர்ந்த அன்பும் சிறந்த பண்பும் உடைய இவர்கள் சொற்பொழிவை மிகப் பலரும் கேட்டுப் பயன்பெற வேண்டுமென்பது என் வேண்டுகோள்.

43, சவகர் நகர்,
சென்னை-82

இங்ஙனம்
மறை. திருநாவுக்கரசு
24-2-1983

[தமிழ்த்தொண்டர் கோ. முத்துப்பிள்ளை

மகாகவி பாரதி நகர், சென்னை-600 039.]

## 13. VOLUNTARY SERVICE

நல்ல தமிழ்ப் பெயரைத் தாங்கி நிற்கும் தமிழ்த் தாளிகை ஒன்றில், சில திங்களுக்கு முன்னர் voluntary service என்னும் தொடரை மொழிபெயர்க்காமல் ஆங்கில எழுத்துக்களிலேயே எழுதியிருந்தார்கள். அதே தாளிகையில் மிக அண்மையில், Voluntary agency என்னும் தொடரை அதே உருவில் எழுதியிருப்பதைக் கண்டேன்!

நாட்டு நடப்பு, வீட்டுப் பாடமாக விரிந்து மலர்ந்தது!

Voluntary என்னும் சொல், பேச்சு வழக்கில் பெருகி நிற்பதைக் காண்கிறோம். பொது மக்கள் பன்முறையும் மிகுந்த எழுச்சியோடு பயன்படுத்திவரும் சொல்லாக இது அமைந்துள்ளது. "நான் ஒன்றும் அவரிடம் பேசவில்லை. அவர்தாம் என்னிடம் Voluntaryஆக வந்து பேசினார்." ஆங்கிலமும் தமிழும் ஒன்று கலந்து உறவாடும் புதிய மணிப்பிரவாள நடையாகும் இது!

இதைப் போலவே Service என்னும் சொல்லும் பஞ்சுபடும் பாட்டினைப் பட்டு வருகின்றது. இந்த ஆங்கிலச் சொல்லை விளக்குவதற்கு மூன்று சிறப்பான செந்தமிழ்ச் சொற்கள் முன்னிற்கின்றன. "ஊழியம், தொண்டு, பணி" என்னும் சொற்களை உற்றுநோக்குவார்க்கு உண்மைகள் தெற்றெனப் புலப்படும். எனினும் எடுத்தாளும்போதுதான் ஏறுமாறான போக்குகள் எதிர்ப்படுவதைப் பார்க்கின்றோம். "ஊழியமே" உயர்ந்த சொல் என்று உரைப்பார் ஒருவர்! "தொண்டு" என்னும் சொல்தான் பண்டு முதல் பயின்று வருகிறதெனப் பகருவார் இன்னொருவர்! "பணி"தான் நனி சிறந்தது என்று நயம்பட நவில்வார் மூன்றாமவர்! அள்ளஅள்ளக் குறையாமல் வெள்ளம் போன்ற பொருள்களை வாரி வழங்கும் இம் மூன்று சொற்களும் விலை மதிக்கவொண்ணா மும்மணிகளாகத் திகழ்கின்றன.

"தொண்டு நிறுவனங்கள்" என்னும் தொடரை நாம் பல சமயங்களில் கேட்கின்றோம். Voluntary organisations அல்லது

Voluntary Service organisations என்னும் தொடர்களுக்கு உரிய மொழிபெயர்ப்பாக இது பயன்படுத்தப் பெறுகின்றது என்றே எண்ணுகின்றேன்.

Volunteer என்று சொல்லும்போது "தொண்டர்" என்னும் பெயர், நீண்ட நெடிய வழக்கினால், இனிதாகப் பொருந்தி விடுகின்றது. உழவாரப் படையினைத் தம் திருக்கைகளிலே ஏந்தித் திருக்கோயில் திருச்சுற்றுகளை அழகு படுத்தினர் அப்பர் அடிகள். உழவாரத் தொண்டு ஓர் உன்னதத் தொண்டாக அமைந்தது.

பிறர்க்கு வந்த நோயைத் தமக்குற்ற நோயாகக் கருதுவது பேருள்ளம் படைத்தோரின் செயலாகும். தன்னலத்தை மறந்து பிறர் நலம் போற்றி உழைப்பதே ஊழியமாகும். சிறப்பு ழகரத்தைத் தன்னகத்தே கொண்டுள்ள "தமிழ்" என்னும் சொல்லைப் போல, "ஊழியம்" என்னும் சொல்லும் அந்த ழகரத்தை ஏற்று அழகுடன் மிளிர்கின்றது.

பணியின் பாங்கும் சுவையானது. மணி பார்த்துச் செய்யப் படுவது பணியன்று! பணம் பார்த்துச் செய்யப்படுவதும் பணி யன்று! மனமாரச் செய்யப்படுவதே பணியாகும். பணிவாகச் செய்யப்படுவதும் பணியாகும். பணியின் பெருமையைத் தெய்வ நலம் பொங்கத் தெரிவிக்கின்றார் திருநாவுக்கரசர்:

"தங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே."

"என் கடன். பணிசெய்து கிடப்பதே" என்று எடுத்துக் கூறிப் 'பணி' என்னும் சொல்லின் பொருளை இமய மலையின் 'எவரஸ்டு' உச்சிக்கே இட்டுச் சென்றுவிட்டார் நாவுக்கரசர்.

Service என்னும் சொல்லுக்கு ஏற்ற தமிழ்ச் சொல்லை முடிவு செய்யும் கட்டத்திற்கு நாம் வந்துவிட்டோம். இதற்குப் "பணி" என்னும் சொல் பாங்குடன் பொருந்தி நிற்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. எனினும் Civil Works என்று சொல்லும்போது "குடிமுறைப் பணிகள்" என்று குறிப்பிடுகின்றோம். Public Works Department என்று வரும்போது "பொதுப் பணித் துறை" என்று எழுதுகின்றோம். ஆகவே Service என்பதற்குப் பணி என்னும் சொல்லைவிட, ஊழியம் என்னும் சொல்லே நன்கு பொருந்துவதாகும் என்பது நான் கண்ட உண்மையாகும்!

பிறரின் தூண்டுதல் சிறிதுமின்றித் தாமே மனமுவந்து செய்கின்ற தொண்டு அல்லது பணி அல்லது ஊழியமே Voluntary Service ஆகும்.

உவப்புடன் செய்யப்பெறுகின்ற பணியே உயர்ந்த பணியாகும். உவர்ப்புடன் செய்யும் செயல்களையெல்லாம் பணியுடன் இணைத்துப் பழுதுபடுதல் ஆகாது. "உவப்பு" என்னும் ஒரே சொல்லில் விருப்பம், மகிழ்ச்சி என்னும் இரண்டு பொருள்களும் இணைந்து நடைபோடுவதைக் கண்டு மகிழலாம். "உளம் கனிந்தபோதெல்லாம் உவந்து உவந்து பாடுமே" என்று கனியக் கனியப் பாடினார் கண்ணின் மணிபோன்ற நாவுக்கரசர். ஈண்டு, விருப்பமும் மகிழ்ச்சியும் வெற்றிக் களிப்புடன் உலா வருவதை உணர்கின்றோமல்லவா?

Voluntary Service = உவப்பு ஊழியம்.

Voluntary Agency = உவப்பூழிய நிறுவனம்.

---

## அருமையான சொற்பொழிவு

மறைமலையடிகளார் இல்லத்தில் நடைபெறும் திருவிளையாடற் புராணத் தொடர் சொற்பொழிவினைக் கேட்கும் நல்லருள் நேற்று மாலை எனக்குக் கிட்டியது. சொற்பொழிவாளர், இறையடியார் ஈசுவர் அவர்களின் சிவக்கோலம்—கணீரென்ற குரல்—பரஞ்சோதியாரின் பாடல்களை இசையோடு சொல்லும் முறை ஆகியன மிக நன்றாக இருந்தன. மேலும் இடையிடையே திருமுறைகள், சித்தாந்தம், மற்றும் இறையடியார் வாக்குகள், தல மேன்மைகள் பொருத்தமான அளவுக்குக் கூறப்படுதல் சொற்பொழிவின் தரத்தினை உயர்த்துகின்றன. சொற்பொழிவு அன்பர் முறையாக மரபு நெறி பிறழாமல் கருத்துகளைக் கூறி விளக்குவது சாலச் சிறப்பாக அமைந்திருக்கிறது.

பெரம்பூர், }
28-2-83 }

வல்லை. தே. கண்ணன்
மேல் முறையீட்டு உதவி ஆணையர்
(வணிகவரி ஓய்வு) விற்பனைவரி ஆலோசகர்

# செய்திகளும் குறிப்புகளும்

### டாக்டர் லோகமுத்துக்கிருட்டிணன் அவர்களுக்குச் சப்பான் நாட்டுப் பல்கலைக் கழக விருது.

சென்னை மருத்துவக் கல்லூரி, மூளை நரம்பியல் துறை இணைப் பேராசிரியர் டாக்டர் லோகமுத்துக் கிருட்டிணன் அவர்கள் மண்டை, மற்றும் மூளை தொடர்பான நரம்பு நோய்கள் தடுப்புபற்றி ஆய்வு நடத்தி, கண்டறிந்த உண்மைகளைப் பாராட்டி, அண்மையில் சப்பானிய நாட்டு பீஜிட்டா காகின் பல்கலைக் கழகம், அவருக்குப் புதிய அறிவியல் ஆராய்ச்சிக் கருவிகளை விருதாக வழங்கிச் சிறப்பித்தது. பதினேழாயிரம் ரூபா மதிப்புள்ள அந்தக் கருவிகளைத் திரு. லோகமுத்துக்கிருட்டிணன் அவர்கள் சென்னை மருத்துவக் கல்லூரிக்கு நன்கொடையாக வழங்கியுள்ளார்.

டாக்டர் லோகமுத்துக்கிருட்டிணன் அவர்கள் எழுதிய 'நரம்பு மருத்துவம்' என்னும் அரிய மருத்துவ நூலொன்று முன்னரே கழக வெளியீடாக வெளிவந்துள்ளமையும் இந்த டாக்டரவர்கள் கழக ஆட்சியர் தாமரைச் செல்வர் வ. சு. அவர்களின் பெயரர் என்பதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கவை. திரு. லோகமுத்துக் கிருட்டிணன் அவர்களின் அறிவாற்றலை அறிந்து பாராட்டி விருது வழங்கிய சப்பானியப்பல்கலைக் கழகத்தைப் பாராட்டுவதுடன், விருது பெற்ற டாக்டர் லோகமுத்துக் கிருட்டிணன் அவர்கட்கு எமது வாழ்த்தினைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

### டாக்டர் ஜே. ஜி. கண்ணப்பர் அவர்கட்குப் புதிய பதவி

1982ஆம் ஆண்டு திசம்பர் 30ஆம் நாளிலிருந்து 1983 சனவரி மாதம் 1-ம் தேதிவரை நடைபெற்ற 17-வது அனைத்திந்திய பற்சிரமைப்பு மாநாட்டில் இந்திய பற்சிரமைப்பு மருத்துவர் கழகத்திற்கு அனைத்திந்தியத் தலைவராக இரண்டாண்டு காலத்திற்குத் தமிழ்நாட்டிலிருந்து பல் மருத்துவப் பேராசிரியர் டாக்டர் ஜே ஜி. கண்ணப்பன் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்வதுடன் டாக்டர் அவர்கட்கு எமது வாழ்த்துகளையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

### இராமநாத அடிகள் நினைவு விழா

23-1-83 அன்று சிவநேயர் பேரவையின் திருவூடல் விழாக் குழுவின் சார்பில், சென்னை, சைதை தாடண்டர் நகர் சமூகக் கூடத்தில் இராமநாத அடிகளார் நினைவுநாள் கொண்டாடப்பெற்றது. பேராசிரியர் பெ. திருஞான சம்பந்தர் அவர்கள் தலைமை தாங்கினார்கள். பேரவைத் தலைவர் புலவர் திரு. இர. திருஞானசம்பந்தன் வரவேற்புரை ஆற்றினர். தவத்திரு சுந்தர சுவாமிகள் வாழ்த்துரை வழங்கினர். இவ்விழாவில் ஆட்சிமொழிக் காவலர் திரு. கி. இராமலிங்கனார் அவர்கட்குச் சிவநெறிக் காவலர் என்னும் பட்டமும், திரு. அ. இராசரத்தின முதலியார் அவர்கட்குச் சிவநேயச் செல்வர் என்னும் பட்டமும் வழங்

க்கப்பட்டன, திருவாளர்கள் மூத்துலிங்கா ரெட்டியார், ஓம் தத்பத் அடிகள் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

### நாவலர் ச. சோமசுந்தர பாரதியாரின் துணைவியார் மறைவு

தமிழ்ப் பேரறிஞரும், தமிழரின் மொழி, இன விடுதலைக்காகப் போராடியவருமான பசுமலை நாவலர் சோமசுந்தர பாரதியார் அவர்களின் துணைவியாரும் சென்னை மருத்துவக் கல்லூரி முதல்வர் திருமதி லலிதா காமேசுவரன் அவர்களின் அன்னையருமான திருமதி வசுமதி பாரதி அவர்கள் சென்னையில் 23-1-83 அன்று காலமானார்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம். திருமதி லலிதா காமேசுவரன் அவர்களுக்கும், அவர்தம் குடும்பத்தார்க்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

## நீலாம்பிகையார் பல்கலைப் பள்ளி (பிரிவு)
## இசைப் பயிற்சிப் பள்ளி

திருநெல்வேலி தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் சார்பில், நெல்லை, கீழைத் தேர்த் தெரு 91ஆம் எண்ணுள்ள கட்டிடத்தில், நீலாம்பிகையார் பல்கலைப் பயிற்சிப் பள்ளியின் பிரிவாகிய இசைப் பயிற்சிப் பள்ளியில் இசைமணி கா. சங்கரனார் அவர்கள் தலைமையில் 3—3—83 அன்று மாலை 4 மணியளவில், திருமதி சரசுவதி, எம்.ஏ., அவர்கள் வாய்ப் பாட்டு வீணை கற்பிக்கத் தொடங்கினார்கள். இவ் இசை வகுப்பு கிழமைக்கு மூன்று நாள் நடத்தப்பெறும். தனிப்பட இசை பயில விரும்புவோரும், அரசினர் தேர்வுக்குச் செல்ல விரும்புவோரும் இப் பள்ளியில் சேர்ந்து இசை பயிலலாம்.

## கோவை இளஞ்சேரனார் மணிவிழா

'கவிஞர் கோ' எனப் பாராட்டப்பெறும் கோவை இளஞ்சேரன் அவர்களின் அகவை அறுபது நிறைவையொட்டி. 25—2—83. வெள்ளி மாலை 7 மணி அளவில் நாகப்பட்டினம் குமரன் திருமண மண்டபத்தில் அவரது மணிவிழா மிகச் சீரும் சிறப்புமாகக் கொண்டாடப் பெற்றது. தவத்திரு குன்றக்குடி அடிகளார் விழாவிற்குத் தலைமை ஏற்று மணி விழாக் கொண்ட மாண்பினர்க்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித் தார்கள். சட்டப் பேரவைத் தலைவர் மாண்புமிகு க. இராசாராம், பி.ஏ. அவர்கள் 'கவிஞர் கோ'விற்கு கணையாழி அணிவித்துச் சிறப்பித்த துடன், "வாழ்வில் ஒரு மணி" என்னும் மலரினையும் வெளியிட்டுப் பாராட்டினர். தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் 'கவிஞர் கோ' எழுதிய 'புதையலும் பேழையும்' என்னும் நூலை வெளியிட்டுப் பாராட்டிச் சிறப்புரை யாற்றினர்.

திருமிகு மன்னை ப. நாராயணசாமி அவர்கள், 'கவிஞர் கோ'வின் மணிவிழா நிறுவனமாம் 'சேரனார் அச்சகம்' என்னும் புதிய மின் அச்சகத்தைத் திறந்து வைத்துப் பாராட்டினார். பின்னர்க் 'கவிஞர் கோ' கோவை இளஞ்சேரனாரின் ஏற்புரையுடன் விழா இனிது நிறை வுற்றது. வாழ்க கோவை இளஞ்சேரனார்!

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-௫௭, பரல் ௫. ௨௦௩ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் (சனவரி) | ரூ. 10—00 |
| ,, ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 10—00 |
| ,, புலவர் ஆ. கந்தசாமி ,, | 50—00 |
| ,, டாக்டர் மா. நன்னன் ,, (தந்தையார் நினைவு கான் நன்கொடை) | 25—00 |
| ,, ஈஸ்வரன் அவர்கள் தொழிலதிபர் | 101—00 |
| ,, திருமுருக விசாகநம்பி அவர்கள் | 5—00 |
| ,, A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 10—00 |

—————

'செந்தமிழ்ச் செல்வி' பற்றிய உரிமை விளக்கம்-1956 ஆம் ஆண்டுச் சட்டம் - விதி 8 - படிவம் 4 இல் கண்டுள்ளபடி

1. வெளியிடும் இடம் : 261, இலிங்கிசெட்டித் தெரு, சென்னை-1
2. வெளியீட்டு முறை : திங்களிதழ்
3. அச்சிடுவோர் பெயர் : அப்பர் அச்சகம்
   இனம் : இந்தியர்
   முகவரி : 80, பிரகாசம்சாலை, சென்னை-108
4. வெளியீட்டாளர் பெயர் : தென்னிந்திய தமிழ்ச் சங்கம்
   இனம் : இந்தியர்
   முகவரி : 80, பிரகாசம்சாலை, சென்னை-108
5. ஆசிரியர் பெயர் : திரு. இரா. முத்துக்குமாரசாமி
   இனம் : இந்தியர்
   முகவரி : 80, பிரகாசம்சாலை, சென்னை-108
6. இதழ் உரிமையாளர்கள், முலதனத்தில் நூற்றுக்கு ஒரு விழுக்காட்டிற்கு மேற்பட்ட பங்குகளுடைய பங்காளிகள் ஆகியோரின் பெயர்களும் முகவரிகளும்: தென்னிந்திய தமிழ்ச் சங்கம் (பதிவு)

மேலே தரப்பட்டுள்ள விளக்கங்கள் அனைத்தும் என்னுடைய முழு நம்பிக்கைக்கும் அறிவுக்கும் ஏற்ப உண்மையானவை என இரா. முத்துக்குமாரசாமியாகிய யான் உறுதியளிக்கிறேன்.

10—3—1983 (ஒப்பம்) இரா. முத்துக்குமாரசாமி,
எம் ஏ.,பி.லிப்.
பதிப்பாளர்

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது
ஆசிரியர் : இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.

## கழக நிலையங்களில் கிடைக்கும்
## பிற பதிப்பாளர்களின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| குறள் கூறும் அரசு—தி. முருகரத்தினம் | 8 | 00 |
| அரபுக் கதைகள்—அ. லெ. நடராஜன் | 25 | 00 |
| நனையாத நதிகள்—ஜெயச்சந்திரன் | 5 | 00 |
| இலக்கிய மலர்கள்—மு. மு. இஸ்மாயில் | 17 | 50 |
| கம்பன் யார்?—டி. கே. சிதம்பரநாத முதலியார் | 5 | 00 |
| மனம்போல் வாழ்வு—கண்ணதாசன் | 5 | 00 |
| பெண் ஒரு மலர்—கோமகள் | 6 | 50 |
| நமது செல்வம்—மீ. ப. சோமு | 12 | 50 |
| கனவுகள் ஆயிரம்—செ. யோகநாதன் | 5 | 00 |
| வெளிச்சம் தேடும் விளக்குகள்—இ. முத்துராமலிங்கம் | 8 | 00 |
| இந்திய பாஸ்போர்ட்—இரவிச்சந்திரன் | 8 | 50 |
| தெற்கே செல்லும் டீசல் வண்டி—நீலவன் | 10 | 00 |
| தெய்வத் திருவிளையாடல்கள்—திருமருகல் சிங்காரவேலனார் | 8 | 00 |
| வில்லி பாரதத்தில் தமிழுணர்ச்சி—டாக்டர் ம. பொ. சி. | 6 | 50 |
| யார் மகளோ—டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி | 6 | 75 |
| அம்பிகை அழகு தரிசனம்—கண்ணதாசன் | 4 | 50 |
| நம்பிக்கை மலர்கள்— ,, | 5 | 00 |
| விடுதலையும் வீடுபேறும்—கி. ஞானசூரியன் | 15 | 00 |
| வைணவ சமயச் சான்றோர்களின் வாழ்க்கை அனுபவங்கள்—க. செ. மணவாளன் | 6 | 00 |
| சிறார்க்கான நல்லொழுக்க நெறி—க. செ. மணவாளன் | 3 | 50 |
| மாந்தோப்பில் வெள்ளைப் புறா—நா. ரா. நாச்சியப்பன் | 3 | 00 |
| கைரேகைக் கலை—சத்தியா, பி.காம். | 20 | 00 |
| ஆவிகள் தொடர்பும் அடையும் நன்மைகளும் —வி. ரவிச்சந்திரன் | 8 | 00 |
| இதழியல் நோக்கு—மா ரா. இளங்கோவன், எம்.ஏ., | 8 | 00 |
| இலக்கியத்தில் அறிவியல்—பி. எல். சாமி, ஐ. ஏ. எசு. | 15 | 00 |
| இனிக்கும் இலக்கணம்—புலவர் இரா. திருமுருகன் | 7 | 50 |
| தான் தன் சுகம்—சிவசங்கரி | 5 | 00 |
| மண் குதிரை—லட்சுமி | 5 | 50 |
| நிற்க நேரமில்லை—லட்சுமி | 11 | 00 |
| திருக்குறள் மரபுகள் (ஆய்வு-7) கு. மோகன்ராஜ் | 35 | 00 |

# கழகப் புதிய வெளியீடுகள்

## கழக அமைச்சர் திருவரங்கர் வரலாறு

**ஆசிரியர் :** கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் நிறுவனரும், மறைத்திரு மறைமலையடிகளாரின் மருகரும், கல்வித்துறையின் பெருமுயற்சியாளரும், சைவ சமயக் காவலரும், பதிப்புத்துறை ஆர்வலரும், கழக ஆட்சியர் தாமரைச் செல்வரின் தமையனரு மான உயர்திரு திருவரங்கனாரின் இவ் வரலாற்று நூல், கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா இளங்குமரன் அவர்களால் சீரியமுறையில் செந்தமிழ் நடையில் எழுதப்பெற்றுள்ளது. டாக்டர் பா. நடராசன் அவர்களின் முன்னுரையுடனும், ஆட்சி மொழிக் காவலர் கீ. இராமலிங்கனாரின் சீரிய ஆங்கில முன்னுரை யுடனும் கூடிய அழகிய பதிப்பு நூலகங்கள்தோறும் இருக்க வேண்டிய இன்றியமையாத வரலாற்று நூல் 200 பக்கங்கள்.

விலை ரூ. 8 00

## வையை வளம்

**ஆசிரியர் :** கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்

இந்நூல் பாண்டி நாட்டின் வளத்திற்கும் வாழ்விற்கும் வகை செய்யும் வையை ஆற்றின் பாங்கினைப் பல்வேறு திருப்பங்களி னின்று அகப்புறச் சான்றுகளுடன் ஆராய்ந்து எழுதப்பெற் றுள்ளது. வளமான செந்தமிழ் நடையில் அமைந்துள்ளது. படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு. நூலகங்கள்தோறும் இடம்பெற்று ஆராய்ச்சியாளர்க்குப் பயன்படத்தக்க நூல்.

விலை ரூ. 7 00

## வள்ளல் எழுவர் (நாட்டிய நாடகம்)

**ஆசிரியர் :** கலைமாமணி கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம்

கடைஎழுவள்ளல்களின் வரலாற்றைச் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் முறையில், அதே நேரத்தில் கண்ணுக்கும் கருத் துக்கும் விருந்தளிக்கும் நாட்டிய நாடகமாகவும் எழுதியுள்ளார் இந்நூலாசிரியர். கவிதைகள் இனிமையும் எளிமையும் கொண்டு படித்துச் சுவைக்கவும் நடித்துக் காணவும் ஏற்ற வகையில் அமைந்துள்ளன. பள்ளிகளிலும், கலைக் கழகங்களிலும் இருக்க வேண்டிய பயனுள்ள நாட்டிய நாடகம்

விலை ரூ 2 50

## Studies in Tamil Literature and History

— V. R Ramachandra Dikshitar, M.A.,

வரலாற்றுப் பேரறிஞர் தீட்சிதர் அவர்கள் எழுதிய தமிழ் இலக்கிய வரலாறுபற்றிய இவ்வரிய நூல் பல ஆண்டுகளாகக் கிடைக்காதிருந்தது. நூலின் அருமை கருதி, இதன் மறுபதிப்பு சிறந்த முறையில் கழக வெளியீடாக வெளிவந்துள்ளது. தமிழறியாப் பிற மொழியினரும் இதன் மூலம் தமிழ் இலக்கிய மாண்பினை அறியும் வாய்ப்பினைப் பெறலாம்.

ரூ. 40 00